10. மெல்லினம் ஆறு ங, ஞ, ண, ந, ம, ன.

11. இடையினம் ஆறு ய, ர, ல, வ, ழ, ள.

12. அ, இ, உ இம்மூன்றெழுத்துகளும் ஒரு பொருளைச்சுட்டி (குறித்து) காட்டும்போது சுட்டெழுத்தென்று சொல்லப்படும்.

13. இவை அகச்சுட்டு, புறச்சுட்டு என இருவகைப்படும்.

14. அகச்சுட்டு சொல்லுக்கு அகத்திலிருந்து ஒரு பொருளைச் சுட்டிக்காட்டுவதாம்.

(உ-ம்.) அவன், அவள், அவர், அது, அவை, இவன், இவள், இவர், இது, இவை, உவன், உவள், உவர், உது, உவை.

15. புறச்சுட்டாவது சொல்லுக்கு வெளியிலிருந்து ஒருபொருளைச் சுட்டிக்காட்டுவது.

(உ-ம்) அப்புஸ்தகம், இம்மலை, உப்பொருள்.

16. இந்தமூன்று சுட்டெழுத்துகளும் அந்த, இந்த, உந்த, எனத்திரிந்தும் வரும்.

(உ-ம்.) அந்தமனிதன், இந்தமரம், உந்தவீடு.

17. அரசன், இரும்பு, உடம்பு என்பவைகளில் அகர, இகர, உகரங்கள் ஒருபொருளைச்சுட்டிக்காட்டாமையால் சுட்டெழுத்தாகா.

18. எ, யா, ஆ, ஓ, ஏ என்னும் இந்த ஐந்தெழுத்துகளும் வினாப்பொருளைத் தரும்போது வினாவெழுத்தென்று சொல்லப்படும்.

19. இவை அகவினா, புறவினா என இருவகைப்படும்.

20. அகவினா சொல்லுக்கு அகத்திலிருந்து ஒரு பொருளை வினாவும் எழுத்துகளாம். வினாவுதல்=கேட்டல்.

(உ-ம்) எவன், எவள், எவர், எது, எவை, யாவன், யாவள், யாவர், யாது, யாவை, ஏவன், எவள், ஏவர், ஏது, ஏவை.

21. புறவினா சொல்லுக்குப் புறத்திலிருந்துவினாவும் எழுத்துகளாம்.

(உ-ம்.) எம்மாடு, யாங்ஙனம், கோவிந்தனா, கிருஷ்ணனோ, இராமனே.

22. எ, யா, சொல்லுக்கு முதலில் அகவினாவாகவும் புறவினாவாகவும் வரும்.

23. ஆ, ஓ, கடைசியில் புறவினாகவரும்.

24. ஏ, முதலில் அகவினாவாகவும் கடைசியில் புறவினாவாகவும் வரும்.

25. அடியில் இரண்டிரண்டாகக் காட்டும் எழுத்துகள் ஒன்றுக்கொன்று இனவெழுத்தெனப்படும்.

| | | | | |
|---|---|---|---|---|
| அ, ஆ. | எ, ஏ. | ஔ, உ. | ட, ண. | ற, ன. |
| இ, ஈ. | ஐ, இ. | க, ங. | த, ந. | |
| உ, ஊ. | ஒ, ஓ. | ச, ஞ. | ப, ம. | |

26. இடையினம் ஆறும் ஓரினமாம்.

27. உயிர்மெய்யெழுத்தாவது உயிரும் மெய்யும் கூடிப்பிறக்கும் எழுத்தாம்.

28. அது இரண்டு வகைப்படும். உயிர்மெய்க் குறில உயிர்மெய் நெடில்.

29. உயிர்மெய்க்குறில் தொண்ணூறு.

(உ-ம்.) க்+அ=க  க்+எ=கெ
க்+இ=கி  க்+ஒ=கொ
க்+உ=கு இப்படியேமற்றமெய்களின் மேலும் ஐந்துகுறிலையும் தனித்தனி ஏற்றித் தொண்ணூறாதல்காண்க.

30. உயிர்மெய்நெடில் நூற்றிருபத்தாறு.

(உ-ம்.) ச்+ஆ=சா  ச்+ஊ=சூ  ச்+ஐ=சை
ச்+ஈ=சீ  ச்+ஏ=சே  ச்+ஓ=சோ
ச்+ஔ=சௌ. இப்படியேமற்றமெய்களின் மேலும் ஏழுநெடிலையும் தனித்தனிக்கூட்டி நூற்றிருபத்தாறுதல் காண்க.

31. ஆய்தம் குறளெழுத்துக்குப்பின்னும் உயிரெழுத்தோடு சேர்ந்தவல்லெழுத்துக்கு மேலும்வரும்.

(உ-ம்.) அஃது, இஃது, எஃது, இருபஃது.

32. உகரம் குற்றியலுகரம், முற்றியலுகரம்என இரண்டு வகைப்படும்.

33. ஒருகுறிலினாலும், இரண்டு முதலெழுத்தா செய்யப்படாத சொற்களின் கடைசியில் வல்லினமெய்யின்மேல் ஏறிவரும் உகரம் குற்றியலுகரமாம்.

34. அது நெடிற்றொடர், உயிர்த்தொடர், வன்றொடர், மென்றொடர், இடைத்தொடர், ஆய்தத்தொடர் என்று ஆறுவகைப்படும்.

1. நெடிற்றொடர் முதலில் நெட்டெழுத்தைப் பெற்று இரண்டெழுத்து மொழியாகவே வரும்.

(உ-ம்.) பாகு, காசு, பாடு, ஊது, ஆறு.

2. உயிர்த்தொடர் ஈற்றுக்கு அயலில் உயிர்மெய் யெழுத்தைப்பெற்று வருவது.

(உ-ம்.) மெழுகு, பிசாசு, வெள்ளாடு, ஓடாது, பாலாறு.

3. வன்றொடர் ஈற்றுக்கு அயலில் வலலினமெய் வருவது.

(உ-ம்.) பாக்கு, பாய்ச்சு, நாட்டு, சாத்து, சீப்பு, நாற்று.

4. மெல்லினமெய்யைத் தொடர்ந்து வருவது மென்றொடர்.

(உ-ம்.) அங்கு, பஞ்சு, வண்டு, பந்து, வம்பு, நன்று.

5. இடையின மெய்யைத்தொடர்ந்து வருவது இடைத்தொடர்.

(உ- ம்.) போழ்து, பெய்து, மார்பு, சேர்பு.

6. ஆய்தவெழுத்தைப் பெற்றுவருவது ஆய்தத் தொடர்.

(உ-ம்.) எஃகு, கஃசு, இஃது.

35. தனித்தும் தனிக்குறிலைச்சேர்ந்தும் வரும் வல்லினமெய்யின் மேலும், மெல்லினமெய்யின் மேலும், இடையினமெய்யின் மேலும்உளள உகரம் முற்றியலுகரமாம்.

(உ-ம்.) கு, து, தனித்தவல்லின மெய்யின்மேல் வந்தது.
புகு, பசு, படு, அது, உறு, தனிக்குறிலை யடுத்தவல்லின மெய்யின் மேல் வந்தது.
வேணு, விம்மு மெல்லினமெய்யின்மேல் வந்தது.
செலவு, ஏழு, நாலு இடையின மெய்யின்மேல் வந்தது.

36. கண்ணிமைப்பொழுது அல்லது கைந்நொடிப்பொழுது ஒரு மாத்திரைக்களவாம்.

37. (a) உயிர் நெட்டெழுத்துக்கும், உயிர்மெய் நெட்டெழுத்துக்கும் மாத்திரை இரண்டு.

(b) உயிர்க்குற்றெழுத்துக்கும் உயிர்மெய்க் குற்றெழுத்துக்கும் மாத்திரை ஒன்று.

(c) மெய்யெழுத்துக்கும் குற்றியலுகரத்திற்கும் ஆய்தத்துக்கும் மாத்திரை அரையாம்.

38. பண்டமாற்றிலும், விளியிலும், இராகத்திலும், புலம்பலிலும் உயிரெழுத்தும, மெய்யெழுத்தும் தமது மாத்திரையினின்று நீண்டொலிக்கும.

39. பன்னிரண்டுயிரும் க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ, ங, என்னும்பத்துமெய்யுமாகிய இருபத்திரண்டெழுத்தும் மொழிக்கு முதலில்வரும்.

(உ-ம்.) அணி, ஆணி, இடி, ஈயம், உரல், ஊது, எடு, ஏணி, ஐயன், ஒன்று, ஓசை, ஔவியம.

40. பத்துமெய்களில் க, ச, த, ந, ப, ம என்னும் இவ்வாறுமெய்யும்பன்னிரண்டு உயிரோடுங் கூடிமொழிக்குமுதலில் வரும்.

(உ-ம்.)

1. கடி, கால், கிழி, கீழ், குடி, கூடை, கெண்டை, கேடு, கொடி, கோடு, கௌவை.

2. சண்டை, சாரம், சில, சீரகம், சுகம், சூது, செயல், சேதம், சைகை, சொல், சோதி, சௌரியம்.

3. தம்பி, தாழை, திக்கு, தீமை, துட்டு, தூரம், தெரு, தேசம், தையல், தொண்டை, தோகை, தௌவை.

4. நண்பு, நாடு, நிலம், நீலம், நுங்கு, நூல், நெல், நேற்று, நைதல், நொண்டி, நோன்பு, நௌவி.

5. படி, பாடு, பிடி, பீடு, புலன், பூதம், பெயர், பேய், பையன், பொடி, போடு, பௌவம்.

6. மடி, மாடு, மின்னல், மீசை, முடி, மூட்டை, மெத்தை, மேடு, மொழி, மோசம், மௌவல்.

41. வகரமெய் அ, ஆ, இ, ஈ, எ, ஏ, ஐ, ஔ என்கிற எட்டுயிரொழுத்தோடு கூடி மொழிக்கு முதலில்வரும்.

(உ-ம்-) வண்டி, வாழை, விந்தை, வீடு, வெடி, வேட்டை, வையம், வௌவால்.

## மொழிமுதற்போலி.

48. அகரத்திற்குமுன் இகரம்வந்தாலும் யகரம் வந்தாலும் ஐகாரத்தைத் தந்து ஒலிக்கும்.

(உ-ம்.)

வயிகுண்டன் = வைகுண்டன். வயயம் = வையம்.
பயித்தியம் = பைத்தியம். அய்யம் = ஐயம்.
சயித்தியம் = சைத்தியம். அய்யா = ஐயா.

49. அகரத்துக்குமுன் உகரம் வந்தாலும் வகரம் வந்தாலும் ஔகாரத்தைத் தந்து ஒலிக்கும்.

(உ-ம்.) பவுத்திரா = பௌத்திரா. அவ்வை = ஔவை.
சவுக்கியம் = சௌக்கியம். கவ்வை = கௌவை.

50. சகர ஞகர யகரங்களுக்குமுன் உள்ள அகரத்திற்கு ஐகாரம் போலியாகவரும்.

(உ-ம்.) பசல் = பைசல். மஞ்சு = மைஞ்சு.
மச்சுனன் = மைச்சுனன். அஞ்சு = ஐஞ்சு.

51. சிலசொற்களின் முதலில் உள்ள நகரத்திற்கு ஞகரம் போலியாகவரும்.

(உ-ம்) நாயிறு = ஞாயிறு. நண்டு = ஞண்டு. நயம் = ஞயம்.

## மொழியிடைப்போலி.

52. சிலசொற்களின் மத்தியில் உள்ள தகரத்துக்குச் சகரம் போலியாகவரும்.

(உ-ம்.) பித்த=பிச்ச. மைத்துனன்=மைச்சுனன்
வைத்த=வைச்ச. தைத்த=தைச்ச.

53. சிலசொற்களின் மத்தியில்உள்ள நகரதகரங்களுக்கு ஞகர சகரங்கள்போலியாம்.

(உ-ம்.)

நீந்தினன்=நீஞ்சினன். சாய்ந்தான்=சாய்ஞ்சான்.
உய்ந்தான்=உய்ஞ்சான். பாய்ந்தது=பாய்ஞ்சது.

54. தொடர்மொழி ஐகாரத்தின் பின் உள்ள நகரத்துக்கு ஞகரம் போலியாகவரும்.

(உ-ம்.) ஐந்நூறு = ஐஞ்ஞூறு. அரைநாண்=அரைஞாண்.

## மொழியிறுதிப்போலி.

55. இரண்டு குறிலையடுத்த அஃறிணைப்பெயரின் கடைசியிலுள்ள மகரத்துக்கு னகரம்போலியாகவரும்.

(உ-ம்.) மரம்= மரன். குளம்=குளன். கடம் = கடன்.
நிலம்=நிலன். நலம்=நலன். படம்=படன்.

56. சில சொற்களின் கடைசியில்உள்ள லகரத்துக்கு ரகரம் போலியாம்.

(உ-ம்.) பந்தல்=பந்தர். சாம்பல்=சாம்பர்.

57. சில குற்றியலுகரங்களுக்கு அர் போலியாக வரும்.

(உ-ம்.) வண்டு=வண்டர். சுரும்பு=சுரும்பர்.

58. மெய்யெழுத்துகள் அ என்னும் சாரியை பெறும்.

(உ-ம்,) க, ங, ச, ஞ, ட, ண.

59. உயிர் நெட்டெழுத்துகள் காரம் என்னும்சாரியை பெறும்.

(உ-ம்.) ஆகாரம், ஈகாரம், ஊகாரம்.

60. உயிர்க்குறிலும், உயிர்மெய்க் குறிலும் கரம், காரம என்கிற இரண்டு சாரியையும் பெறும்.

(உ-ம்.) அகரம், அகாரம், ககரம், ககாரம்.

61. உயிர் மெய்நெடில் சாரியைபெறா.

## பெயரியல்.

1. சொற்கள நான்கு வகைப்படும்.

பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல்.

2. ஒரு பொருளின் பெயரைக் காட்டுவது பெயர்ச்சொல்லாம்.

(உ-ம்.) மனிதன், மரம், வீடு.

3. வினைச் சொல்லாவது ஒரு பொருளின் தொழிலைக் காட்டுவது.

(உ-ம்.) வந்தான், போகிருன், இருப்பான்.

4. இடைச்சொல்லாவது பெயர்வினைகளை அடுத்துவருவது.

(உ-ம்.) இராமனும்—உம்   ஆ-ஆ-என்செய்வார்—ஆ-ஆ
கிருஷ்ணனே—ஏ   ஒ-ஒ-கொடிது—ஒ-ஒ.

5. உரிச்சொல்லாவது பெயர்வினைகளை யடுத்து, குணத்தைக்காட்டிக்கொண்டு செய்யுளில் வந்து வழங்குஞ் சொல்லாம்.

(உ-ம்.) நனி பேதை-நனி. சால உழந்தான்-சால.
உறுபொருள்-உறு. நனி நின்றான்-நனி.

6. இந்நான்கு சொற்களில் உரிச்சொல்லொழிந்த மற்றை மூன்றும் இயற்சொல், திரிசொல்லென இரண்டு வகைப்படும்.

7. இயற்சொல்லாவது படித்தவர்களுக்கும் படியாதவர்களுக்கும் பொருள் விளங்குஞ்சொல்லாம்.

8. திரிசொல்லாவது படித்தவர்களுக்குமாத்திரம் பொருள் விளங்குஞ் சொல்லாம்.

9. 1. பெயரியற்சொல். கல், காடு, கிளி.
பெயர்த்திரிசொல். நறவு, அடவி, கிள்ளை
2. வினையியற்சொல். போனான், எழுதினான்.
வினைத்திரிசொல். படர்ந்தான், வரைந்தான்.
3. இடை இயற்சொல். மரத்தால், மலையில் என்பவைகளிலுள்ள ஆல், இல் என்னும் உருபுகள்.
4. இடைத்திரிசொல். மரத்தான், மலைமிசை என்பவைகளிலுள்ள ஆன், மிசை என்னும் உருபுகள்.

15 அதுமூன்றுவகைப்படும்.
இலக்கணமுடையது, இலக்கணப்போலி, மரூஉ.

16. இலக்கண முடையதென்பது இலக்கணங் கெடாமல்வழங்குவது.

(உ-ம்.) வீடு, வாசல், குளம், படி.

17. இலக்கணப் போலியென்பது இலக்கணத்துக்கு ஒத்து இல்லாவிட்டாலும் இலக்கணமுடையது போல வருவது. இது பெரும்பாலும்சொல் முன்பின்னாகமாறிவரும்.

(உ-ம்)

முன்றில் = (இல்முன்று.) புறங்கடை = (கடைப்புறம்.)
புறநகர் = (நகரபுறம்.) கோயில் = (கோவில்.)

18. மரூஉ என்பது இலக்கணங்கெட்டு வழங்குவது.

(உ-ம்.) அருமந்தபிள்ளை = (அருமருந்தன்னபிள்ளை.)
ஆச்சு = (ஆயிற்று.)
போச்சு = (போயிற்று.)
தஞ்சை = (தஞ்சாவூர்.)

19. தகுதிவழக்கென்பது ஒருபொருளுக்கு இயல்பாயுள்ள சொல்லை ஒழித்துத்தகுந்தவேறு சொல்லால் அந்தப்பொருளைச்சொல்வது.

20. அதுமூன்றுவகைப்படும்.
இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி.

21. இடக்கரடக்கல் சொல்லத் தகாததை மறைத்துச் சொல்வது.

(உ-ம்.) கால்கழுவிவந்தேன். பவ்வீ.

22. மங்கலம் அமங்கலத்தை மங்கலமாகக் கூறுவது. அமங்கலம் = அசுபம்.

(உ-ம்.) அஞ்சினோர் = (செத்தார்.)
நன்காடு = (சுடுகாடு.)
வெள்ளாடு = (காராடு.)
தாலிபெருகிற்று = (தாலி அறுந்தது.)

23. குழூஉக்குறியென்பது ஒருகூட்டத்தார் யாதாவது ஒருகாரணத்தால் ஒருபொருளுக்குரியசொல்லையொழித்து வேறுசொல்லால் அப்பொருளைக்கூறுவது.

(உ-ம்.) சொல்விளம்பி = (கள்.) பறி = (பொன்.)

24. பெயர்ச்சொல் இடுகுறிப்பெயர், காரண பெயர் என்று இரண்டு வகைப்படும்.

25. இடுகுறிப்பெயராவது காரணமில்லாமல் ஒரு பொருளுக்கு வழங்கும் பெயராம்.

(உ-ம்,) மரம், மலை, காடு, நெல்.

26. காரணப்பெயராவது காரணத்தினால் ஒரு பொருளுக்கு வழங்கும் பெயராம்.

(உ-ம்.) கணக்கன், கரியன், சிறுவன், நாற்காலி, செவிடு.

27. பெயர்ச்சொல்லில் திணை, பால், இடம், வேற்றுமை என்று நான்கு பொருளை அறியவேண்டும்.

28. திணை இரண்டு. உயர்திணை, அஃறிணை.

29. மனிதர், தேவர் ஆகிய இருவர்பெயரும உயர்திணையாம்.

(உ-ம்.) இராமன், பிரமன்.

30. மற்ற எல்லாப்பெயர்களும் அஃறிணையாம்.

(உ-ம்.) விலங்கு, பறவை, கல், மரம்.

31. இருதிணைக்கும் பொதுவான பெயர்கள். தன்மைப்பெயர், முன்னிலைப்பெயர், தான், தாம், தாங்கள், பிள்ளை, கடவுள், தாய், தந்தை, அன்னை.

32. பால் ஐந்து. ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன் பால், பலவின்பால்.

33. ஆண்பால் விகுதிகள் - அன், ஆன், மான்.
பெண்பால் விகுதிகள் - இ, அள், ஆள்.
பலர்பால் விகுதிகள் - அர், ஆர், கள், மார்.
ஒன்றன்பால் விகுதி " - து.
பலவின்பால் விகுதிகள் - வை, கள், அ.

(உ-ம்.)

| ஆண்பால். | பெண்பால். | பலர்பால். |
|---|---|---|
| குருடன் | குருடி | குருடர். |
| பெரியவன் | பெரியவள் | பெரியவர். |
| பாட்டன் | பாட்டி | பாட்டன்மார். |
| | | பாட்டிமார். |
| பேரன் | பேர்த்தி | பேரன்மார். |
| | | பேர்த்திமார். |

| | | |
|---|---|---|
| பெருமான் | பெருமாட்டி | பெருமான்கள். |
| | | பெருமாட்டிகள். |
| சிறுவன் | சிறுமி | சிறுவர். |
| | | சிறுமிகள். |
| கோமான் | கோமாட்டி | கோமான்கள். |
| | | கோமாட்டிகள், |
| தேவன் | தேவி | தேவர். |
| | | தேவிமார். |
| தோழன் | தோழி | தோழன்மார். |
| | | தோழிகள். |
| மூடவன் | மூடத்தி | மூடவர். |
| | | மூடத்திகள். |
| மணவாளன் | மணவாட்டி | மணவாளர். |
| | | மணவாட்டிகள். |

| ஒன்றன்பால். | பலவின்பால். |
|---|---|
| அது. | அவை. |
| யாது. | யாவை. |
| எது. | எவை - எவைகள். |
| ,, | பல - சில. |

34. ஆண்பால் பெண்பால் பலர்பால் மூன்றும் உயர்திணையாம்.

35. ஒன்றன்பாலும், பலவின்பாலும் அஃறிணையாம்.

36. இகரவிகுதி பெண்பாலையே அல்லாமல் ஆண்பாலையும், ஒன்றன்பாலையும் காட்டுவதும் உண்டு.

(உ-ம்.) ஆண்பால் — ஒன்றன்பால்
அறவி — நாற்காலி.
வில்லி — முக்காலி.

37. பால்காட்டும் விகுதிபெறாத ஆண்பாற் பெயர்கள். கோ, வேள், குரிசில், தோன்றல்.

38. பால்காட்டும் விகுதிபெறாமல் வரும் பெண்பாற் பெயர்கள்.

தையல், மாது, நங்கை, மடந்தை.

39. ஒன்றன்பால், பலவின்பால் விகுதிகளைப் பெறாத அஃறிணைப்பெயர்கள் பால்பகா வஃறிணைப் பெயர்களாம். பால்பகாவஃறிணைப்பெயர் = பால்பிரிக்கக்கூடாத அஃறிணைப்பெயர். (ஒன்றன்பாலுக்கும் பலவின்பாலுக்கும் பொதுவானபெயர்.)

(உ-ம்.) வீடு, மரம், குளம், காடு, குடை, பாம்பு, மலை.

40. a. மொழியிரண்டு. ஒருமை, பன்மை.

b. ஆண்பால், பெண்பால், ஒன்றன்பாற் பெயர்கள் ஒருமையாம்.

c. பலர்பால், பலவின்பாற் பெயர்கள் பன்மையாம்.

41. ஒருமையாகவே வரும் எண்ணுப்பெயர்கள். ஒருவன், ஒருத்தி.

42. ஒருவர் என்னும் சொல் உயர்திணை ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும், பொதுவாய் பலர்பால் வினையைக்கொண்டு முடியும்.

(உ-ம்) அங்கு இருந்த புருஷர்களில் ஒருவரென்னைக்கண்டு பேசினார்.

அந்த ஸ்திரிகளில் ஒருவர் இங்கே இருக்கின்றார்.

43. இரண்டு, மூன்று, முதலிய எண்ணுப்பெயர்கள் பன்மை யாகையால் அவைகளிலிருந்து ஆண்பாற் பெயரும் பெண்பாற்பெயரும் வரமாட்டா.

44. பன்மையாகவே வரும் பெயர்கள்.

மக்கள், மாந்தர், பலர், சிலர், பல, சில, எல்லாம்.

45. இடம் மூன்று. தன்மை, முன்னிலை, படர்க்கை.

46. (a.) தன்மை யொருமை:—நான், யான்.

தன்மைப் பன்மை:— நாம், நாங்கள், யாம், யாங்கள்,

(b.) முன்னிலை யொருமை:—நீ

முன்னிலைப்:— பன்மை, நீர், நீயிர், நீவிர் நீங்கள்.

(c.) தன்மை முன்னிலைப் பெயர்கள் அல்லாத மற்ற எல்லாப்பெயர்களும் படர்க்கை.

(உ-ம்.) மனிதன், வீடு, அவன்.

47. பெயர்ச்சொற்கள் பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என ஆறுவகைப்படும்.

48. 1. பொருட்பெயர்:—மனிதன், மரம், வில்.

2. இடப்பெயர் :—பட்டணம், தோட்டம், வானம், அயோத்தி.

3. காலப்பெயர் :—வருடம், மாசம், நாள், நாழிகை.

4. சினைப்பெயர் :—தலை, கண், கால், விரல்.

5. குணப்பெயர் :—வெண்மை, கருமை, பெருமை, சிறுமை.

6. தொழிற்பெயர் :—நடத்தல், வருகை, செயல், உணவு.

49. (a.) மை, ஐ, பு, கு, றி, று, அம், பம், நர், து என்னும் விகுதிகளைப்பெற்றுக் குணத்தைக்காட்டும் பெயர்கள் பண்புப்பெயர்களாம்.

(உ-ம்.) கருமை —மை. நன்றி—றி. நன்னர்—நர்.
தொல்லை— ஐ. நன்று—று. தீது — து.
நன்பு — பு. நலம் — அம்.
நன்கு — கு. திட்பம்—பம்.

(b.) சில பண்புப் பெயர்கள் விகுதிபெறாமலும்வரும்.

(உ-ம்.) பாவம், புண்ணியம், சுவை, அன்பு, அழகு.

50. சுட்டிப்பெயர்கள் :—

அவன் - அவள் - அவர் - அது - அவை-
இவன் - இவள் - இவர் - இது - இவை-
உவன் - உவள் - உவர் - உது - உவை.

51. வினைப்பெயர்கள்—

எவன் - எவள் - எவர் - எது - எவை -
யாவன் - யாவள் - யாவர் - யாது - யாவை.
ஏவன் - ஏவள் - ஏவர் - ஏது - ஏவை.

52. எல்லாம் என்பது இருதிணைகளுக்கும் மூன்றிடங்களுக்கும் பொதுவாய் வரும்.

(உ-ம்.) அவர்கள் எல்லாம். நாம் எல்லாம்.
அவைகள் எல்லாம். நீங்கள் எல்லாம்.
மனிதர் எல்லாம்.

53. வேற்றுமை எட்டு.

54. முதல்வேற்றுமை, இரண்டாம்வேற்றுமை, மூன்றாம்வேற்றுமை, நான்காம்வேற்றுமை, ஐந்தாம்வேற்றுமை, ஆறாம்வேற்றுமை, ஏழாம்வேற்றுமை, எட்டாம்வேற்றுமை.

55. (a) முதல்வேற்றுமையாவது திரிபில்லாத பெயரேயாம்.

(b.) முதல் வேற்றுமைக்கு வேறுபெயர்கள் :—எழுவாய்-கர்த்தா-செய்பவன்- வினைமுதல்.

(c.) எழுவாய்வேற்றுமையின் சொல்லுருபுகள். ஆனவன்- ஆனவள்- ஆனவர்- ஆனது- ஆனவை- என்பவன்- என்பவள்- என்பவர்- என்பது- என்பவை.

(d.) இந்தச் சொல் உருபுகளைப் பெறாமல் தனித்து வருவதே பெரும்பான்மையாம்.

(c.) பெயர்ச்சொல்லையும் வினைச்சொல்லையும் வினாச்சொல்லையும் கொண்டுமுடிவதே முதல்வேற்றுமையின்பொருளாம்.

(உ-ம்.) கடவுள் ஒருவர். மிருகங்களுக்குக்கால்கள் நான்கு. அவன்யார். அதுஎது.

இராமன் வந்தான். இராமனானவன் வந்தான். இராமனென்பவன் போனான்.

56. இரண்டாம் வேற்றுமையின் உருபு:—ஐ.

அதன்பொருள்:—ஆக்கல்-அழித்தல்-அடைதல்-நீக்கல்-ஒத்தல்-உடைமை.

ஆக்கல் முதலிய எல்லாப் பொருள்களும் செயப்படுபொருள் என்று சொல்லப்படும்.

(உ-ம்.)

கோட்டையைக்கட்டினன்......................... ஆக்கல்.
மரத்தைவெட்டினன்......................... அழித்தல்.
பணத்தைப்பெற்றான்......................... அடைதல்.
சாப்பாட்டைநீக்கினன்......................... நீக்கல்.
வெள்ளியைப்போன்றது......................... ஒத்தல்.
பொருளையுடையான்......................... உடைமை.

57. (a.) மூன்றும்வேற்றுமையின் உருபுகள்:— ஆல் - ஆன் - ஒடு - ஓடு.

(b.) பொருள்:—முதற்கருவி-துணைக்கருவி-இயற்றுதற்கருத்தா-ஏவுதற்கருத்தா- உடனிகழ்ச்சி.

(உ-ம்.) தச்சனால்கட்டப்பட்டகோவில் இயற்றுதற்கருத்தா.
அரசனால்கட்டப்பட்டகோவில் ஏவுதற்கருத்தா.

உபாத்தியாயரோடேமாணாக்கன்வந்தான் ... உடனிகழ்ச்சி
பொன்னாற்செய்தமோதிரம் ... முதற்கருவி.
உளியினாற்செய்த மத்து ... துணைக்கருவி.

(c.) சொல்லுருபுகள்- கொண்டு-உடன்.

(உ-ம்.) வாள்கொண்டுவெட்டினான் ... கருவி.
அவனுடன்போனான் ... உடனிகழ்ச்சி.

(d.) ஆல்- ஆன்- கொண்டு உருபுகள் கருவிப்பொருளுக்கும், ஓடு-ஒடு- உடன் உருபுகள் உடனிகழ்ச்சிப்பொருளுக்கும் வரும்.

58. (a.) நான்காம்வேற்றுமை யுருபு:—கு. பொருள்:—கொடை, பகை, நேர்ச்சி, தகுதி, அதுவாதல், பொருட்டு, முறை.

(உ-ம்.)

ஏழைகளுக்குச் சோறுபோட்டான்..................கொடை.
எலிக்குப்பகை பூனை.......................................பகை.
இராமனுக்குச்சுக்கிரீவன்நேர்ந்தனன்.................. நேர்ச்சி.
கிரீடம் அரசர்க்குத்தகுந்தது ........................... தகுதி.
மோதிரத்துக்குப் பொன்...........................அதுவாதல்.
கூலிக்குவேலைசெய்தான்........................ பொருட்டு.
அவனுக்கு இவன்மகன்................................. முறை.

(b.) பொருட்டுப் பொருளில் பொருட்டு, நிமித்தம், ஆக என்பவை சொல்லுருபுகளாகவரும்.

(உ-ம்.) தருமத்தின் பொருட்டுக்குளம்வெட்டினான். உத்தியோகத்தின் நிமித்தம்போனான். கூலிக்காகவேலை செய்தான்.

59. ஐந்தாம் வேற்றுமையின் உருபு:—இல், இன்.
பொருள்:—நீங்கல், ஒப்பு, எல்லை, ஏது.

(உ-ம்.)

மலையின்வீழ் அருவி......................................நீங்கல்.
காக்கையிற்கறுப்புடையது களாப்பழம்...............ஒப்பு.
சென்னையின்கிழக்குக்கடல்.............................எல்லை.
கல்வியிற்பெரியவர் கம்பர்..............................ஏது.

இன்று இருந்து என்னும் சொல்லுருபுகள் நீங்கற்பொருளில்வரும்.

(உ-ம்) மெத்தையிலிருந்து இறங்கினேன்.
ஊரினின்று வந்தான்.

60. இல், இன் உருபுகள் போல எனப்பொருள்படும்போது ஒப்புப்பொருளும், பார்க்கிலும் காட்டிலும் எனப்பொருள் படும்போது எல்லைப்பொருளும், ஆல் எனப்பொருள்படும் போது ஏதுப்பொருளுமாம்.

(உ-ம்.) தாமரையிற் சிவந்தமுகம். (தாமரைபோல)
பாம்பிற் சீறினேன். (பாம்புபோல)
அவனில் இவன் நல்லவன். (அவனைப்பார்க்கிலும்)
அதனில் இது பெரியது. (அதைப்பார்க்கிலும்)
அவன் செல்வத்தில் பெரியவன். (செல்வத்தினால்)
இராமன் அழகிற் சிறந்தவன். (அழகினால்)

61. (a.) ஆறாம் வேற்றுமையின் உருபு :—அது.
(b.) பொருள் :—தற்கிழமை, பிறிதின்கிழமை.

(c.) தற்கிழமை ஐந்துவகைப்படும்:—பண்பு, உறுப்பு, ஒன்றன்கூட்டம், பலவினீட்டம், திரிபினாக்கம்.

(d.) பிறிதின் கிழமைமூன்றுவகைப்படும்:—பொருள், இடம், காலம்.

(உ-ம்.)

பாலினது வெண்மை.................குணப்பண்புத்தற்கிழமை.
இராமனதுவரவு.....................தொழிற் பண்புத்தற்கிழமை.
இராமனதுகால்.............................உறுப்புத்தற்கிழமை.
பசுக்களினதுமந்தை..............ஒன்றன் கூட்டத்தற்கிழமை.
பறவைகளினது கூட்டம்..........பலவினீட்டத்தற்கிழமை.
நெல்லினதுபொரி........................திரிபினாக்கத்தற்கிழமை.
இராமனது பசு........................பொருட்பிறிதின்கிழமை.
இராமனது வீடு..........................இடப்பிறிதின்கிழமை.
இராமனது நாள்..........................காலப்பிறிதின்கிழமை.

62. உடைய என்பது தற்கிழமை, பிறிதின் கிழமை இரண்டிற்கும் சொல்லுருபாகவரும்.

(உ-ம்.) இராமனுடைய கை — தற்கிழமை
இராமனுடைய புஸ்தகம் — பிறிதின்கிழமை

63. ஏழாம்வேற்றுமையின்உருபுகள். இல்-இடம்-கண்-கால்-அகம்-உள்-மேல்-முன்-பின்-தலை-இடை-கடை-உழி-வாய்-பால்-முதலியவைகளாம்.

பொருள்:—இடப்பொருள்.

(உ-ம்.) ஊரில்இருந்தான் — இல்
அவனிடம்போனான் — இடம்
பகைவர்மேல் சென்றான் — மேல்

கற்றார்முற்றோன்றாகழிவிரக்கம் முன்
நல்லாறொழுக்கின்றலைநின்றார் தலை
மற்றஉருபுகளையும்இப்படியேகூட்டிக்காண்க.

64. பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் ஆறுவகைப் பெயர்களும் தற்கிழமைக்கும், பிறிதின்கிழமைக்கும் இடமாய் நிற்கும்.

(உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| மணியில் ஒளி | பொருட்பெயர் | தற்கிழமைக்கு | இடமாயிற்று. |
| மரத்தில் பறவை | ,, | பிறிதின்கிழமைக்கு | ,, |
| ஊரில் வீடு | இடப்பெயர் | தற்கிழமைக்கு | ,, |
| ஆகாயத்தில் பருந்து | ,, | பிறிதின்கிழமைக்கு | ,, |
| மாதத்தில் நாள் | காலப்பெயர் | தற்கிழமைக்கு | ,, |
| கார்த்திகையில் மாங்காய் பழுத்தது | ,, | பிறிதின்கிழமைக்கு | ,, |
| கையில் விரல் | சினைப்பெயர் | தற்கிழமைக்கு | ,, |
| கையில் மோதிரம் | ,, | பிறிதின்கிழமைக்கு | ,, |
| கறுப்பில் அழகு | பண்புப்பெயர் | தற்கிழமைக்கு | ,, |
| இளமையில் செல்வம் | ,, | பிறிதின்கிழமைக்கு | ,, |
| ஆட்டத்தில் அபிநயம் | தொழிற்பெயர் | தற்கிழமைக்கு | ,, |
| ஆட்டத்தில் பாட்டு | ,, | பிறிதின்கிழமைக்கு | ,, |

65. எட்டாம் வேற்றுமையின்உருபுகள் :—பெயரின் ஈறு திரிதல் - ஈறுகெடுதல்-ஈறுமிகுதல் - ஈற்றயலெழுத்துத்திரிதல் - இயல்பாதல்.

பொருள் :—அழைக்கப்படுபொருள்.

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்.) | அம்மை | அம்மா | ஈறுதிரிதல் |
| | அரசன் | அரச | ஈறுகெடுதல் |

| | | |
|---|---|---|
| மகன் | மகனே | ஈறுமிகுதல் |
| மக்கள் | மக்காள் | ஈற்றயலெழுத்துத்திரிதல் |
| உலகத்தார் | உலகத்தீர் | ,, |
| மாநிலத்தார் | மாநிலத்தீர் | ,, |
| தம்பி | தம்பீ | இயல்பு |

66. பொதுப்பெயரின்கடைசியிலுள்ள ஐகாரம் ஆ என்றும் ஆய் என்றும் திரியும்.
(உ-ம்.) அன்னை அன்னா. பிள்ளை பிள்ளாய்.

67: உயர்திணை அஃறிணைப்பெயர்களின் ஈற்று ஐகாரம் ஆய்எனத்திரியும்.
(உ-ம்.) நங்கை நங்காய். நாரை நாராய்
மங்கை மங்காய். தேரை தேராய்

68. சில ஆண்பாற்பெயர்களுக்கு ஈறு கெட்டு அயல் நீளுதலும், அதனோடு ஓகாரம் மிகுதலும், ஏகாரம் மிகுதலும், ஈறுகெட்டு அயல் அகரம் ஏகாரமாதலும் உருபாம். (உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| அப்பன் | அப்பா. | அப்பன் | அப்பாவே |
| அண்ணன் | அண்ணா. | ஐயன் | ஐயாவே |
| அப்பன் | அப்பாவோ. | ஐயன் | ஐயே |
| அண்ணன் | அண்ணாவோ. | அண்ணன் | அண்ணே |

ஓகாரம் மிகுதல் புலம்பலுக்கே கொள்க.

69. விளிவேற்றுமை அண்மைவிளி, சேய்மைவிளி என இரண்டுவகைப்படும். அண்மை = சமீபம். சேய்மை = தூரம்.

அண்மைவிளி இயல்பாய்வரும். சேய்மைவிளி முன்சொன்ன விகாரங்களைப் பெற்றுவரும்.

(உ-ம்.) தம்பி. அப்பா முதலியன.

70. விளிவேற்றுமை பெறுதபெயர்கள்.

தன்மைப்பெயர், முன்னிலைப்பெயர் சுட்டுப்பெயர், வினைப்பெயர், தான் - தாம் - தாங்கள் - எல்லாம்- பல - சில-மற்றையோன்-பிறன.

71. தன்மைப்பெயரும், முன்னிலைப்பெயரும், தான், தாம் என்னும படர்க்கைப்பெயரும் இரண்டாவது முதலிய வேற்றுமைகளை ஏற்கும்போது விகாரப்படும்.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) யான் | என் | என்னை |
| யாம் | எம் | எம்மால் |
| யாங்கள் | எங்கள் | எங்களுக்கு |
| நாம் | நம் | நம்மில |
| நீ | உன்-நின் | உனது-நினது |
| நீர் | உம்-நும் | உம்மிடத்தில்-நும்மிடத்தில் |
| நீங்கள் | உங்கள் | உங்களை |
| தான் | தன் | தன்னை |
| தாம் | தம் | தம்மை |
| தாங்கள் | தங்கள் | தங்களை |

72. நான் - நீயிர் - நீவிர் என்பவைகள் எழுவாய் வேற்றுமை தவிர மற்றவேற்றுமைகளுக்குவரா.

73. (a.) எல்லைப் பொருளில் வரும் ஐந்தாம்

வேற்றுமையின் உருபும், ஆறும்வேற்றுமை உருபும் பெயர்ச்சொல்லைக்கொண்டு முடியும.

(உ-ம்.) சென்னையின் தெற்குத்திருவல்லிக்கேணி.
மரத்தினது கிளை.

(b.) மற்றைவேற்றுமை யுருபுகள் வினைச்சொல்லைக்கொண்டு முடியும்.

குதிரை ஓடினது. பட்டணத்திலின்றுவந்தான்.
பழத்தைத்தின்முன். வீட்டில் இருக்கிறான்.
பிரம்பால் அடித்தான். அண்ணா வா.
ஏழைகளுக்குக் கொடுத்தார.

(c) நான்காம் வேற்றுமை உருபும், ஏழாம்வேற்றுமை உருபும் வினையோடு கூடிவரும் பெயர்சசொல்லையும் கொண்டு முடியும்.

(உ-ம்) நோயக்குக் கொடுக்கும் மருந்து. பள்ளிக்கூடத்தில் இருக்கிற பிள்ளைகள். தாகத்துக்குக்கொடுத்த தண்ணீர். தோட்டத்தில் இருக்கிற மரம்.

74. எழுவாய் வேற்றுமையும், விளிவேற்றுமையும் தவிர மறற வேற்றுமைகள் இன், அன், அ, அத்து, அற்று என்னும் சாரியைகளைப் பெற்றும் வரும்

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்) கையினை | இன். | மரத்தின் | அத்து. |
| அதனை | அன. | அவைற்றில் | அற்று. |
| எனக்கு | அ. | | |

75. மகர வீற்றுப்பெயர்கள் வேற்றுமையுரு

புகளைப் பெறும்போது அம் என்பது கெட்டு அத்துச்சாரியை பெறும்.

(உ-ம) குளத்தை, முகத்தால்.

76. எல்லாம் என்பதுமகரம் கெட அற்றுச்சாரியையும் உருபுக்குப் பின்னால் உம என்னும இடைச்சொல்லையும் பெறும்.

(உ-ம) எல்லாவற்றையும்-எல்லாவற்றாலும்.

77. டு - று க்களையுடைய நெடிற்றொடர்க்குற்றிய லுகரமும், உயிர்த்தொடர்க்குற்றியலுகரமும் வேற்றுமை யுருபேற்கும்போது அக்குற்றியலுகரம் ஏறியிருந்த மெய்கள் இரட்டும்.

| | | | |
|---|---|---|---|
| காடு | காட்டை. | ஆறு | ஆற்றை. |
| நாடு | நாட்டை. | சேறு | சேற்றை. |
| குறடு | குறட்டை. | வயிறு | வயிற்றை. |
| தவிடு | தவிட்டை. | கயிறு | கயிற்றை. |

78. எண்ணைக் குறிக்கும் ஆறு என்பது அவ்வாறு இரட்டாது.

(உ-ம்.) ஆறை - ஆறால்- ஆறுக்கு ஆறினின்று -ஆறினுடைய.

79. மகர வீற்றுப்பெயர் அத்துச்சாரியையுடன் இன்சாரியையும் பெறும்.

(உ-ம்.) பலம் + அத்து + இன் + ஐ = பலத்தினை

இடம் + அத்து + இன் + ஆல் = இடத்தினால்

80. எல்லாம் என்பது அற்றுச்சாரியையுடன் இன்சாரியையும் பெறும்.

(உ-ம்.)
எல்லாம் + அற்று + இன் + ஐ + உம் = எல்லாவற்றினையும்
எல்லாம் + அற்று + இன் + கு + உம் = எல்லாவற்றிற்கும்.

81. தன்மைப்பெயரும், முன்னிலைப்பெயரும், தான் - தாம் என்னும் பெயர்களும் நான்காம் வேற்றுமை உருபேற்கும்போது அகரச்சாரியைபெறும்.

(உ-ம்.)

| | |
|---|---|
| என் + அ + கு = எனக்கு. | நும் + அ + கு = நுமக்கு |
| உன் + அ + கு = உனக்கு. | தன் + அ + கு + தனக்கு |
| நம் + அ + கு = நமக்கு. | தம் + அ + கு + தமக்கு |

82. அஃறிணை ஈற்றுப்பன்மையின் பாற்பெயர்கள் அற்றுச்சாரியையும், அதனுடன் இன்சாரியையும் பெறும்.

(உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| பலவற்றை | அற்று. | பலவற்றிற்கு | அற்று-இன். |
| சிலவற்றை | ,, | சிலவற்றிற்கு | ,, |
| தீயவற்றை | ,, | தீயவற்றினை | ,, |
| பெரியவற்றை | ,, | பெரியவற்றினால் | ,, |
| அவற்றை | ,, | அவற்றினின்று | ,, |
| எவற்றை | ,, | அவற்றினுடைய | ,, |
| யாவற்றை | ,, | யாவற்றின்கண் | ,, |

83. அது - இது - எது என்னும் பெயர்கள் அன் இன் - சாரியைகளைப்பெறும்.

(உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| அதனை | - அன் | அதினுடைய | - இன் |
| இதனால் | ,, | இதினிடத்தில் | ,, |
| எதற்கு | ,, | எதினால் | ,, |

84. கொண்டு, ஆக, நின்று, இருந்து என்னுஞ் சொல்லுருபுகளுக்கு முன் வருகிற ஐ - கு - இன் - இல் என்பவைகளைச் சாரியைகளாகக் கொள்ளவேண்டும்.

(உ-ம்.)

| | | |
|---|---|---|
| இராமனைக்கொண்டு அவ்வேலையைமுடித்தான் | | ஐ |
| அவனுக்காக வந்தேன் | - | கு |
| குதிரையினின்று இறங்கினேன் | - | இன் |
| ஊரிலிருந்து வந்தான் | - | இல் |

## வினையியல்.

1. வினைச்சொல் தெரிநிலை குறிப்பு என இரண்டு வகைப்படும்.

2 தெரிநிலை வினையாவது தொழிலும் காலமும் வெளிப்படையாகத் தோன்றுவது.

(உ-ம்) நடந்தான்.

3. அத்தெரிநிலை வினையானது வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம், தொழிற்பெயர், வினையாலணையும் பெயர் என ஐந்து வகைப்படும்.

4. (1) தெரிநிலை வினைமுற்றில் செய்பவன்-கருவி-நிலம் - செயல் - காலம் - செய்யப்படுபொருள் இந்த ஆறையும் அறியவேண்டும்.

(உ-ம்.) இராமன் கிருஷ்ணனைப் பிரம்பால் அடித்தான். அடித்தான் என்னும் வினைமுற்றில் ஆறும் விளங்குதல்காண்க.

| | | |
|---|---|---|
| செய்பவன் | இராமன். | செயல் - அடித்தல் |
| கருவி | பிரம்பு. | காலம் - இறந்தகாலம். |
| நிலம் | நின்ற இடம். | செயப் - கிருஷ்ணனை. |

(b) செயப்படுபொருள் குன்றிய வினையானது அது ஒழிந்த மற்ற ஐந்தையும் காட்டும்.

(உ-ம்.) இருந்தான்.

5. வினைமுற்றில பகுதி செயலையும், இடைநிலை முதலியவை காலத்தையும், விகுதி செய்பவனையும் காட்டும்.

6. சொல்லின் முதலில் இருக்கும் பகாப்பதமே பகுதியாம்.

(உ-ம்.) நடந்தான் - நட. வென்றான் - வெல்
கண்டான் - காண். கொண்டான் - கொள

பகுதிதொழிலைக்காட்டுதல் அறிக.

7. விகுதியாவது திணைபால் இடங்களைக் காட்டிக் கொண்டு சொல்லின் ஈற்றில் நிற்பதேயாம்.

(உ-ம்.) ஓடினான். ஆன் விகுதி - உயர் - ஆண்பால் - படர்க்கையைக்காட்டலறிக.

8. இடைநிலை பகுதிக்கும் விகுதிக்கும் நடுவில் வந்து காலங் காட்டுவது.

(உ-ம்.) செய்தான். த்-இடைநிலை இறந்தகாலங்காட்டியது.

9. காலம் - மூன்று.

இறந்தகாலம் - நிகழ்காலம் - எதிர்காலம்.

10. இறந்தகால இடைநிலைகள்:—த், ட், ற், இன்.

(உ-ம்.) செய்தான் - த். வென்றான்-ற்.
கண்டான் - ட். பாடினான் - இன்.

11. நிகழ்கால இடைநிலைகள்:— கிறு - கின்று ஆநின்று.

(உ-ம்.)

செய்கிறான் -கிறு. படியாநின்றான் - ஆநின்று.
வருகின்றான் -கின்று. ஓடாநின்றான்- ,,

12. (a) எதிர்கால இடைநிலைகள்:—ப், வ்.

(உ-ம்.) தின்பான் - ப், தருவான் - வ்.

(b) இவ்விடை நிலைகளே அல்லாமல் பகுதியில் இரட்டிவரும் மெய்யெழுத்துகளும், விகுதிகளும் காலங்காட்டும்.

(உ-ம்.)

பகுதிமெய் இரட்டிஇறந்த காலங்காட்டுபவை

| | | |
|---|---|---|
| அட்டான. | இட்டான். | போட்டான். |
| விட்டான் | புக்கான் | நட்டான் |
| தொட்டான் | உற்றான் | பெற்றான் |

விகுதிஎதிர் காலங்காட்டுபவை.

செய்யும். செய்க.

13. வினைமுற்றுகள் ஐந்து வகைப்படும்.

1. தன்மை வினைமுற்று.
2. முன்னிலை வினைமுற்று.
3. படர்க்கை வினைமுற்று.
4. ஏவல் வினைமுற்று.
5. வியங்கோள் வினைமுற்று.

14. தன்மை வினைமுற்று ஒருமை பன்மை என இரண்டுவகைப்படும்.

1. தன்மை ஒருமை வினைமுற்று விகுதிகள்:- ஏன்-என். (உ-ம்.) செய்தேன் - செய்தனென்.

2. தன்மைப் பன்மை வினைமுற்று விகுதிகள்:—ஓம் - எம் - ஆம். (உ-ம்.) படித்தோம் - இருந்தேம் - தூங்கினும்.

15. முன்னிலை வினைமுற்று ஒருமைபன்மை என இரண்டுவகைப்படும்.

1. முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதிகள்;—ஆய் - ஐ. (உ-ம்.) கொடுத்தாய் - கொடுத்தனை.

2. முன்னிலைப் பன்மை வினைமுற்று விகுதிகள்:—ஈர் - இர். (உ-ம்.) கொண்டீர் - கொண்டனிர்.

16. படர்க்கை வினைமுற்று ஐந்துவகைப்படும். ஆண்பால் வினைமுற்று. ஒன்றன்பால்வினைமுற்று. பெண்பால் வினைமுற்று. பலவின்பால் வினைமுற்று. பலர்பால் வினைமுற்று.

## உயர்திணை.

1. ஆண்பால் வினைமுற்று விகுதிகள்:-ஆன்-அன். (உ-ம்.) செய்தான் - செய்தனன்.

2. பெண்பால் வினைமுற்று விகுதிகள்:-ஆள் அள். (உ-ம்.) கூப்பிட்டாள் - கூப்பிட்டனள்.

3 பலர்பால் வினைமுற்றுவிகுதிகள்:—ஆர்-அர் - ப. (உ-ம்) வந்தார் - வந்தனர் - வருப.

ப - விகுதியே எதிர்காலத்தையும், பலர்பாலையும் காட்டும.

அஃறிணை.

4. ஒன்றன்பால் வினைமுற்று விகுதிகள்:-து று. (உ-ம்.) வெந்தது - போயிற்று.

று - விகுதி இன் இடைநிலையைப்பெற்று இறந்த காலம ஒன்றற்கு மாத்திரம வரும.

5. பலவின்பால் வினைமுற்று விகுதி:—அ. (உ-ம்.) வைகின்றன.

17. உம் விகுதி எதிர்காலத்தைக்காட்டிக்கொண்டு ஆண்பால் - பெண்பால் - ஒன்றனபால் - பலவின் பாலகளுக்குப பொதுவாய்வரும்.

இதற்குச் செய்யுமென்வாய்பாட்டுவினை முற்று என்றுபெயர்.

(உ-ம.) இராகவன் வரும். அது பறக்கும்.
இலட்சுமி செய்யும். அவை ஓடும்.

18. இந்தச்செய்யுமென்வாய் பாட்டுவினைமுற்று கடைசியில் உள்ள உயிர்மெய் கெட்டும்வரும.

(உ-ம்.)

அவன் சாம் (சாகும்). அது ஆம் (ஆகும்).
அவள் போம் (போகும்). அவைபோம் (போகும்).

19. ஏவலாவது கட்டளைப்பொருளுள்ள முன்னி லை வினைமுற்றும்.

20. ஏவல வினைமுற்றனது ஒருமை பன்மை என இரண்டு வகைப்படும்.

1. ஏவலொருமை வினைமுற்று விகுதிகள்:- ஆய் - இ.

(உ-ம்.) கேளாய், பாராய், கேட்டி, பார்த்தி.

21. விகுதி கெட்டு பகுதியே ஏவலொருமை யாக வருவதும் உண்டு.

(உ-ம்.) உண் - காண் - பார் - செய் நட.

22. ஏவற்பன்மை வினைமுற்று விகுதிகள்:- உம் - ஈர் - மின்.

(உ-ம்.) சாரும் - செய்யீர் - நடமின்.

23. வியங்கோளாவது இருதிணை - ஐம்பால் - மூ விடங்களுக்கும் பொதுவான ஏவற்பொருளுள்ள வி னைமுற்றும். விகுதிகள்:—க - இ.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) | அவன்வருக - வாழி | அது வருக - வாழி |
| | அவள்வருக - வாழி | அவைவருக - வாழி |
| | "அவர் வருக - வாழி | நான்வருக - வாழி |
| | | நீ வருக - வாழி |

24. ஏவல்வினைமுற்றும், வியங்கோள் வினைமுற் றும் இடைநிலை பெறாமல் விகுதியே காலங்காட்ட எதிர்காலத்துக்கு மாத்திரம்வரும்.

25. பால்காட்டும் விகுதிகுறைந்து பெயரைக் கொண்டு முடியும்வினைச்சொல் பெயரெச்சமாம்.

26. அது மூன்றுவகைப்படும்.

இறந்த காலப்பெயரொச்சம், நிகழ்காலப்பெயரொச்சம், எதிர்காலப் பெயரொச்சம்.

27. இறநதகாலப் பெயரொச்ச விகுதி-அ
நிகழ்காலப் பெயரொசசவிகுதி - அ
எதிர்காலப் பெயரொச்சவிகுதி - உம்

எதிர்காலபபெயரொச்சத்தில் விகுதியே காலங் காட்டும்.

(உ-ம்-)

| இறந்தகாலம். | நிகழ்காலம். | எதிர்காலம். |
|---|---|---|
| பார்த்த | பாாக்கிற | பாாக்கும் |
| கண்ட | காண்கின்ற | காணும் |
| சென்ற | செல்லாநின்ற | செலுலும் |
| ஓடின | ஓடுகிற | ஓடும் |

28. இந்தப்பெயரெச்சங்கள் கொண்டுமுடியும் பெயர்சசொற்கள் ஆறுவகைப்படும். அவை செய்பவன்-கருவி-நிலம்-செயல்-காலம்-செயப்படுபொருள்.

| | | | |
|---|---|---|---|
| படித்த மனிதன் | செய்பவன் | வந்தவரவு | தொழில் |
| உண்ட இலை | கருவி | பிறந்தநாள் | காலம் |
| இருந்தவீடு | நிலம் | குடித்தபால் | செயப்படுபொருள். |

29. எதிர்காலப் பெயரொச்சமும,உம் விகுதிபெற்றுவரும் ஏவற்பன்மை வினைமுற்றும் ஈற்றுயிர்மெய் கெட்டும்வரும்.

(உ-ம்.) சாங்காலம், நீர்போம்.

30. பால்காட்டும் விகுதி குறைந்து வினையைக் கொண்டு முடியும் வினைச்சொல் வினையெச்சமாம்.

31. அது மூன்றுவகைப்படும்; இறந்தகால வினையெச்சம், நிகழ்கால வினையெச்சம் - எதிர்கால வினையெச்சம்.

32. இறந்தகாலவினையெச்சவிகுதிகள்-உ-இ-ய்-ஆ.

(உ-ம்.) செய்து - ஓடி - ஆய் - போய் - படியா (படித்து)

33. நிகழ்கால வினையெச்ச விகுதி - அ

(உ-ம்.) செய்ய - படிக்க - தர - வர - நிற்க.

34. எதிர்கால வினையெச்ச விகுதிகள் - இன் - ஆல் - கால்.

(உ-ம்.) செய்யின் - செய்தால் - செய்தக்கால்.

35. உகர விகுதியைப் பெற்றுவரும் வினையெச்சம் மாத்திரம் இடைநிலையால் காலங்காட்டும். மற்றவிகுதிகளைப் பெற்றுவரும் வினையெச்சங்கள் விகுதியால் காலங் காட்டும்.

36. மூன்றுகாலப் பெயரெச்ச வினையெச்சங்களுக்கும் வழங்கும் வேறுபெயர்கள்.

1. இறந்த- பெயரெச்சம்=செய்த என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.
2. நிகழ்-பெயரெச்சம்=செய்கின்ற என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.

3. எதிர்கால - பெயரெச்சம் = செய்யுமென் வாய்பாட்டுப் பெயரெச்சம்.

4. இறந்த - வினையெச்சம் = உ - இ - ய் - விகுதிகளைப் பெறுபவை செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
ஆ - விகுதிபெறுவது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

5. நிகழ் - வினையெச்சம் = செய என்னும் வாய்பாட்டுவினையெச்சம், அல்லது மூக்காலத்துக்கும் பொதுவான வினையெச்சம்.

6. எதிர்கால - வினையெச்சம் = செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

37. செய்து - செய்யா என்னும் வினையெச்சங்கள் தன் கர்த்தாவின் வினைகளையே கொண்டுமுடியும்.
(உ-ம்.) இராமன் உண்டுவந்தான் - இராமன் போய்வந்தான்
இராமன் ஓடிவந்தனன் - இராமன் செய்யாவந்தான்
இங்கு வினையெச்சங்களுக்கும் அவை கொண்டு முடியும்வினைகளுக்கும் இராமன்கர்த்தாவாதல் காண்க.

38. செய என்னும வினையெச்சமும், செயின் என்னும் வினையெச்சமும் தன்கர்த்தாவின் வினையையும்; வேறுகர்த்தாவின் வினையையும்கொண்டுமுடியும்.

(உ-ம்.)

| | |
|---|---|
| 1. இராமன் படிக்கவந்தான்<br>இராமன் படிக்கின் பாடம் ஒப்புவிப்பான்<br>இராமன் படித்தால் பாடம் ஒப்புவிப்பான்<br>இராமன் படித்தக்கால் பாடம் ஒப்புவிப்பான். | இவ் வினையெச்சங்கள் தன்கர்த்தாவின் பயனிலை கொண்டன. வினையெச்சங்களுக்கும் அவைகொண்ட வினைமுற்றுகளுக்கும் ஒரே கர்த்தாவாதல் காண்க. |
| 2. கிருஷ்ணன் அடிக்க இராமன் அழுதான்<br>மழை பெய்தால் ஏரி நிரம்பும்<br>மழை பெய்யின் நெல் விளையும்<br>மழை பெய்தக்கால் ஆற்றில் வெள்ளம்வரும். | அடிக்கமுதலிய வினையெச்சங்கள் கொண்டமுடியும் வினைமுற்றுகளுக்கு வேறு கர்த்தாக்கள் வந்திருத்தல் காண்க. |

39. (a) செய என்னும் வினையெச்சம் காரணத்தைக் காட்டினால் இறந்தகாலமாம்.

காரணம் காரியத்துக்கு முன்னுள்ளது.

| | |
|---|---|
| (உ-ம்.) மழைபெய்ய நெல் விளைந்தது. காற்றுஅடிக்க மரம் சாய்ந்தது. | நெல்விளைதற்கும், மரம் சாய்தற்கும் மழைபெய்தலும்காற்றடித்தலும் காரணமாதல் அறிக. |

(b) செய என்னும் வினையெச்சம் காரியத்தைக் காட்டினால் எதிர்காலமாம்.

காரியம் காரணத்துக்குப்பின் உண்டாவது.

| | |
|---|---|
| (உ-ம்.) நெல்விளைய மழை பெய்தது. மரம்சாயக் காற்று அடித்தது. | இங்கே மழைபெய்தலும் காற்றடித்தலும் ஆகிய காரணங்களால் நெல்விளைதலும் மரம்சாய்தலுமாகியகாரியங்கள் உண்டாதல் அறிக. |

(c) செய என்னும் எச்சம் காரண காரியங்களாகாமல்வந்தால் நிகழ்காலமாம்.

| | |
|---|---|
| விளக்குவைக்க வந்தேன். பொழுதுவிடிய வந்தாய். பொழுதுபோக வந்தான். | வினையெச்சங்களின் தொழிலும், அவைகொண்டு முடியும் வினைமுற்றுகளின் தொழிலும ஒன்றுங்கொன்று காரண காரியங் களாகாமல் ஒரே காலத்தில் நடந்தமை காண்க. |

40. செயவெனெச்சம் செய்து என்னும் எச்சமாகத் திரிந்தும் வரும்.

| | |
|---|---|
| (உ-ம்.) விளக்குவைத்து வந்தேன் பொழுது விடிந்து போனாய். பொழுது போய் வந்தான். | இங்கே வைக்க, விடிய, போக என்னும் வினையெச்சங்கள் செய்து என்னும் எச்சமாகத்திரிந்து வந்தன. |

41. தொழிற்பெயராவது வினைப்பகுதிகள் -தல், அல் முதலிய விகுதிகளில் ஒன்றைப் பெற்றுவருவது.

42. தொழிற்பெயர் விகுதிகள்:—தல் - அல் - அம் - ஐ - இ - வை - கை - கு - பு - வு - தி - சி - வி - உள் - காடு - பாடு - அடம் - மதி - மை - து.

(உ-ம்.)

| | | |
|---|---|---|
| ஆதல் - தல் | செய்கை - கை | கல்வி - வி |
| ஆடல் - அல் | போக்கு - கு | விக்குள் - உள் |
| ஆட்டம் - அம் | நடப்பு - பு | சாக்காடு - காடு |
| சொலை - ஐ | செலவு - வு | கோட்பாடு - பாடு |
| வெகுளி - இ | மறதி - தி | கட்டடம் - அடம் |
| பார்வை - வை | உணர்ச்சி - சி | இறக்குமதி - மதி. |

43. மை - து விகுதிகளைப் பெற்றுவரும் தொழிற்பெயர்கள் மாத்திரம் காலங்காட்டும். மற்றவிகுதிகளைப் பெற்றுவரும் தொழிற்பெயர்கள் காலங்காட்டா.

44. மைவிகுதித் தொழிற்பெயர் இறந்தகால, நிகழ்காலங்களுக்கும், துவ்விகுதித் தொழிற்பெயர் மூன்றுகாலங்களுக்கும் வரும்.

இறந்த - ஓடினமை - மை. ஓடினது - து
நிகழ் - ஓடுகின்றமை - மை. ஓடுகின்றது - து
எதிர் - ஓடுவது - து

45. விகுதி பெற்றுவரும் இத்தொழிற் பெயர்கள் தவிர, முதனிலைத் தொழிற்பெயர் - முதனிலை திரிந்த தொழிற்பெயர், முதனிலைபெறுத தொழிற்பெயர் என வேறு மூன்றுவகைத்தொழிற் பெயர்களும் உண்டு.

46. முதனிலைத்தொழிற் பெயராவது தல் - அல்

முதலிய விகுதிகளைப் பெறாமல் பகுதியே தொழிற் பெயராக வருவது.

(உ-ம்.) முனை - கனை - பிடி.

47. முதனிலை திரிந்த தொழிற்பெயராவது விகுதி இல்லாமல் பகுதி விகாரப்பட்டுத் தொழிற்பெயராக வருவது.

| | |
|---|---|
| (உ-ம்.) தின் = தீன் | படு = பாடு |
| உண் = ஊண் | பாடு = பாட்டு |

48. விகுதிகளைப் பெறாமலும், மற்றவினை விகற்பங்கள் பிறவாமலும் தொழிலைக்காட்டும் பெயர்கள் முதனிலை பெறாத தொழிற்பெயர்களாம்.

(உ-ம்.) சண்டை - கூத்து - வேட்டை.

49. (a) வினையாலணையும் பெயராவது வினைமுற்று பெயர்த்தன்மை யடைந்து வேற்றுமை யுருபேற்று வருவதாம்.

(உ-ம்.)

| தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|
| பார்த்தேனை | பார்த்தாயை | பார்த்தானை |
| பார்த்தோமை | பார்த்தீரை | பார்த்தாளை |

(b) ஒன்றன்பால் ஒழிந்த மற்றபால்களில் வரும் படர்க்கை வினையாலணையும் பெயர்கள் ஈறு திரிந்தும் வரும்.

(உ-ம்.) நடந்தவன் - நடந்தவள் - நடந்தவர் - நடந்தவை.

(c) செய்யுமென் வினைமுற்றும், வியங்கோள்

வினை முற்றும், ஏவல்வினை முற்றும் வினையாலணை யும் பெயர்களாக வரமாட்டா.

50. தெரிநிலை வினையானது தன்வினை, பிறவினை; செயப்படுபொருள் குன்றியவினை, செயப்படுபொருள் குன்றாவினை; செய்வினை, செயப்பாட்டுவினை என ஆறுவகைப்படும்.

51. (a) தன் வினையாவது தன்கர்த்தாவின் செயல் பிறனிடத்திற் செல்லாது அக்கர்த்தாவினிடத்திலே யே உள்ளது.

(b) பிறவினையாவது தன் வினைப்பகுதி வி-பி-கு-சு-டு-து-பு-று க்களில் ஒன்றைப்பெற்று வருவதாம்.

(உ-ம்.)

| தன் | | பிற. | தன் | | பிற. |
|---|---|---|---|---|---|
| செய் | - | செய்வி | காண் | - | காட்டு |
| நட | - | நடப்பி | உண் | - | ஊட்டு |
| போ | - | போக்கு | கல் | - | கற்பி |
| பாய் | - | பாய்ச்சு | துயில் | - | துயிற்று |
| உருள் | - | உருட்டு | பயில் | - | பயிற்று |
| இரு | - | இருத்து | சுருள் | - | சுருட்டு |
| எழு | - | எழுப்பு | முயல் | - | முயற்று |
| துயில் | - | துயிற்று | நில் | - | நிறு |

இப்பிறவினைப் பகுதிகளினின்றும் செய்வித்தான் - செய்வித்த - செய்வித்து - செய்வித்தல் - செய்வித்தவன் என வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்

ரம் - தொழிற்பெயர் - வினையாலணையும் பெயர்கள் பிறத்தல் காண்க.

52. சிலபகுதிகளின் இடையிலிருக்கும் மெல்லின மெய் வல்லின மெய்யாகத் திரிதலும், நடுவில் ஒரு மெய் தோன்றியும் பிறவினையாகும்.

(உ-ம்.)

| தன். | பிற | தன. | பிற |
|---|---|---|---|
| விளங்கு - | விளக்கு | உருகு - | உருக்கு |
| எழும்பு - | எழுப்பு | பெருகு - | பெருக்கு |
| கலங்கு - | கலக்கு | ஓடு - | ஓட்டு |
| முழங்கு - | முழக்கு | மாறு - | மாற்று |
| திரும்பு - | திருப்பு | ஆடு - | ஆட்டு |

53. (a) செயப்படு பொருளைப் பெற்றுவாராத வினைச்சொற்கள் செயப்படுபொருள் குன்றியவினையாம்.

(b) செயப்படு பொருளைப் பெற்றுவரும் வினைச்சொற்கள் செயப்படுபொருள் குன்றாதவினையாம்.

(உ-ம)

| செ - குன்றியது. | செ - குன்றாதது. |
|---|---|
| நடந்தான். | பாடத்தைப்படித்தான். |
| ஓடினேன். | மரத்தை வெட்டினேன். |
| தூங்கினேன். | வீட்டைக் கட்டினேன். |
| இருந்தான். | இராமனை அடித்தான். |

54. செயப்படு பொருள் குன்றியவினை பிறவினையாக வந்தால் செயப்படுபொருள் குன்றாவினையாம்.

(உ-ம.) குதிரையை ஓட்டினேன், குழந்தையைத் தூங்குவித்தான்.

55. தன்வினை, பிறவினை, செயப்படுபொருள் குன்றியவினை, செயப்படுபொருள் குன்றாவினை இந்நான்கும் செய்வினையாம்.

56. செயப்படுபொருள் குன்றியவினை ஒழிந்த மற்ற வினைப்பகுதிகளோடு அகரச்சாரியையும், படு விகுதியும் சேர்ந்துவந்தால் செயப்பாட்டு வினையாம்.

(உ-ம்.) உண்ணப்பட்டான், உண்ணப்பட்ட, உண்ணப்பட்டது, உண்ணப்படுதல், உண்ணப்பட்டவன். பிறவினையிலும் இவ்வாறு வருதல் காண்க.

57. மேற்கூறிய வினைகள் உடன்பாடும், எதிர்மறையும் என இரண்டு வகைப்படும்.

58. தொழிலின் இருத்தலைத் தெரிவிக்கும் வினை உடன்பாடாம். மேற்சொல்லிய எல்லா வினைகளும் உடன்பாடேயாம்.

59. தொழிலை மறுக்கும் வினை எதிர்மறை வினையாம்.

60 எதிர்மறை விகுதிகள்:—இல-அல்-ஆ.

இல-அல் விகுதிகள் காலங்காட்டும் இடைநிலைகளோடு சேர்ந்தும், ஆகாரவிகுதி காலங்காட்டும் இடைநிலைகளோடு சேராமல் முக்காலத்துக்கும் பொதுவாயும் வரும்.

(உ-ம்.) செய்திலேன், செய்கின்றிலேன், செய்கலேன், செய்யாது.

61. தன்மை வினைமுற்றிலும், முன்னிலை வினைமுற்றிலும், படர்க்கை ஆண்பால், பெண்பால், பலர்பால் வினைமுற்றுகளிலும் எதிர்மறைவிகுதி பெரும்பாலும் மறைந்துவரும்.

| (உ-ம்.) தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|
| உண்ணேன் | உண்ணாய் | ஆ - உண்ணான் |
| உண்ணோம் | உண்ணீர் | பெ - உண்ணாள் |
| | | பலர் - உண்ணார் |

62. பலவின்பால் வினைமுற்றில் ஆகார விகுதியே எதிர்மறையையும், பலவின்பாலையும் காட்டும்.

(உ-ம்.) பறக்கா, நடவா, ஆடா, இறக்கா.

63. எதிர்மறை யொருமையேவல் விகுதி-ஏல்.

(உ-ம்) செய்யேல், உண்ணேல், தின்னேல்.

64. எதிர்மறைப் பன்மையேவல் விகுதி:—

அன்மின். இதில், அல் எதிர்மறை விகுதி, மின் ஏவற்பன்மை விகுதி.

(உ-ம்.) உண்ணன்மின், பாடன்மின், கொடன்மின்.

65. எதிர்மறை வியங்கோள் விகுதி:— அற்க. அற்க என்பதில் அல் - எதிர்மறை விகுதி, க - வியங்கோள் விகுதி.

(உ-ம்.) சொல்லற்க, விடற்க, கூவற்க, வையற்க.

66. எதிர்மறைப் பெயரெச்ச விகுதி :—ஆத. ஆத என்பதில் ஆ - எதிர்மறை விகுதி, த் எழுத்துப் பேறு, அ - பெயரெச்ச விகுதி.

(உ-ம்.) படியாத, கொள்ளாத, தூங்காத.

(உ-ம்.) இராமன் நேற்றுப் பொன்னன், இன்று பொன்னன், நாளைப்பொன்னன். இங்கே பொன்னன் என்னும் பெயர்ப்பகுபதம் பொன்னையுடையவனாய் இருந்தான், இருக்கின்றான், இருப்பான் என மூன்று காலத்தையும் குறிப்பாகக் காட்டுதல் அறிக.

72. அது வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம், வினையாலணையும் பெயர் என நான்குவகைப்படும்.

73. பால் காட்டும் விகுதியைப் பெற்றுவரும் பெயர்ப் பகுபதங்கள் பயனிலையாக வந்தால், அவை குறிப்பு வினைமுற்றாகும்.

(உ-ம்.)

| | |
|---|---|
| நான் குழையினேன் | அவன் குழையினன் |
| யாம் குழையினேம் | அவள் குழையினள் |
| நீ குழையினை | அவர் குழையினர் |
| நீர் குழையினீர் | அது குழையது |
| | அவை குழையன |

குழையினேன் = குண்டலமுடையவனாயிருக்கின்றேன். இது பொருளடியாகப்பிறந்த குறிப்புவினைமுற்று.

இராமன் பட்டணத்தான், தாரணவருடத்தான், நெடுந்தாளன், கரியன், கடுநடையன் என மற்ற இடம், காலம், சினை, குணம், தொழில்களினடியாகப் பிறக்கும் பெயர்ப் பகுபதங்களும் குறிப்பு வினைமுற்றுகளாய் வருதல் காண்க.

74. பண்படி அ - இய என்னும் விகுதிகளைப் பெற்றுப் பெயரைக்கொண்டு முடிவது உடன்பாட்டுக் குறிப்புப் பெயரெச்சமாம்.

(உ-ம்.)

| | | |
|---|---|---|
| நல்ல | கொடிய | மெல்லிய |
| தீய | பெரிய | வலிய |
| உள்ள | சிறிய | நெடிய |
| செய்ய | புதிய | இனிய |

75. (a) பண்படி அ - உ - விகுதிகளைப்பெற்று வினையைக் கொண்டுமுடிவது உடன்பாட்டுக் குறிப்பு வினையெச்சமாம்.

(உ-ம்.) மெல்ல, பைய, வலிய, செடிது, வலிது.

(b) குறிப்புப்பெயரெச்ச வினையெச்சங்களை மற்ற பெயர்களினடியாகப் பிறத்தல் சிறுபான்மை பற்றி அவைகளை இங்கே சொல்லவில்லை.

76. குறிப்பு வினைமுற்றுகள் பெயர்த்தன்மைப்பட்டு வேற்றுமை யுருபேற்றுவருதலால் குறிப்புவினையாலணையும் பெயராம்.

(உ-ம்.) தராசில்வலியதுதாழும், இங்கேவலியதுவினையாலணையும் பெயர்.

77. (a) உண்மை, இன்மை, அன்மை என்னும் பண்புப்பெயர்கள் டு - ஐ - று என்னும் விகுதிகளை முறையே பெற்று ஐம்பால் மூன்றிடங்களுக்கும் பொதுவாகிய குறிப்பு வினை முற்றுகளாகவரும்.

(உ-ம்.)

நான், நாம், நீ, நீர், அவன், அவள், அவர் அது, அவை. } உண்டு, இல்லை, அன்று என்பவைகளை நான் முதலியவைகளோடு கூட்டி ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாதல் அறிக.

(b) உண்டு - உடன்பாடு. இல்லை, அன்று - எதிர்மறை. இல்லை இல்லாமையைச் சொல்வது. அன்று ஒருபொருளை மறுத்து அதற்கு இனமானதைச் சொல்வது.

78. இப்பண்புப் பெயர்கள் மூவிடத்துக்கும், ஐம்பாலுக்கும், உரிய விகுதிகளைப் பெற்றுச் சிறப்பு வினைமுற்றுகளாகவும் வரும்.

(உ-ம்.)

| | | | | |
|---|---|---|---|---|
| உளேன் | உளோம் | உளாய் | உளீர். | |
| இலேன் | இலோம் | இலாய் | இலீர். | |
| அலேன் | அலோம் | அலாய் | அலீர். | |
| உளன் | உளள் | உளர் | உளது | உள. |
| இலன் | இலள் | இலர் | இலது | இல. |
| அலன் | அலள் | அலர் | அலது | அல. |

79. அன்மை, இன்மை என்னும் பண்புப்பெயர்கள் ஆத என்னும் விகுதியைப்பெற்று, எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சமாகவும், ஆமல், ஆமே, ஆது, ஆமை என்னும் விகுதிகளைப் பெற்று எதிர்மறைக் குறிப்பு வினையெச்சங்களாகவும் வரும்.

(உ-ம்.)

| பெயரெச்சம் | வினையெச்சம். | |
|---|---|---|
| அல்லாத | அல்லாமல் | அல்லாமே. |
| இல்லாத | அல்லாது | அல்லாமை. |
| | இல்லாமல் | இல்லாமே. |
| | இல்லாது | இல்லாமை. |

இந்தப்பெயரெச்சங்களில் பகுதியே எதிர்மறையைக் காட்டுகிற படியால் ஆகாரத்தைச் சாரியை என்க.

80. அல்லாத, இல்லாத என்னும் எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சங்கள் ஈறுகெட்டும் வரும்.

(உ-ம்.) அல்லாப்பொருள், இல்லாப்பொருள்.

81. உடன்பாட்டு வினைமுற்று எதிர்மறைக் குறிப்பு வினைமுற்றோடு சேர்ந்துவந்தால், அது எதிர்மறையையே காட்டும்.

(உ-ம்.) செய்தேன்இல்லை, செய்தாய்இல்லை, செய்தான் இல்லை.

82. ஒரு எழுவாய்க்கு இரண்டு வினைமுற்று வந்தால் முதலில் இருக்கும் வினைமுற்றை வினையெச்சமாக்கிக் கொள்க.

(உ-ம்.) இராமன் வந்தான் போனான் = இராமன்வந்து போனான்.

83. இருதிணைக்கும் பொதுவான வினைச்சொற்கள்.

| | |
|---|---|
| தன்மை வினைமுற்று | பெயரெச்சம் |
| முன்னிலை வினைமுற்று | வினையெச்சம் |

| | |
|---|---|
| ஏவல் வினைமுற்று | இல்லை-அன்று- |
| வியங்கோள்முற்று | உண்டு. |
| செய்யுமென்முற்று | |

84. சில வினைச்சொற்கள் செயப்படுபொருள் குன்றிய வினைக்கும், செயப்படுபொருள் குன்றாவினைக்கும் பொதுவினையாக வரும்.

(உ-ம்.) நான் வெளுத்தேன்; செ-குன்றியது.
துணியை வெளுத்தேன்; செ-குன்றாதது.

85. உடன்பாட்டிற்கும் எதிர்மறைக்கும் பொதுவினைகள்.
(உ-ம்)

| பொது | | உடன்பாடு | எதிர்மறை. |
|---|---|---|---|
| காப்பாரான் | = | காப்பாற்றினான் | அதிகப்படுத்தமாட்டான். |
| உண்ணாய் | = | நீ உண் | உண்ணமாட்டாய். |
| செய்யாய் | = | நீ செய் | செய்யமாட்டாய். |
| கொடாய் | = | நீ கொடு | கொடுக்கமாட்டாய். |

86. சிலபகுதிகள் தன்வினைக்கும் பிறவினைக்கும் பொதுவாய் நின்று சாக்குப் பின்னால் மெல்லின மெய்யைப் பெற்றுத் தன்வினையாகவும், வல்லினமெய்யைப் பெற்றுப் பிறவினையாகவும் வரும்.

(உ-ம்-)

| பொது | தன்வினை | பிறவினை. |
|---|---|---|
| கரை | கரைந்தேன் | கரைத்தேன் |
| உரை | உரைந்தேன் | உரைத்தேன் |
| தேய | தேய்ந்தேன் | தேய்த்தேன் |
| நிறை | நிறைந்தான் | நிறைத்தான் |

மடி மடிந்தான் மடிர்தான்
சாய் சாய்ந்தான் சாய்த்தான்

87. தன்மைப்பெயரோடு முன்னிலைப் பெயராவது படர்க்கைப் பெயராவது அந்த இரண்டுமாவது சேர்ந்து ஒருவினைகொண்டு முடியும்போது தன்மைப் பன்மை வினைமுற்றோடு முடியும்.

(உ-ம்.) நானும்நீயும் போனோம்
நானுமஅவனும் போனோம்
நானும்நீயும் அவனும் போனோம்

88. முன்னிலைப் பெயரோடு படர்க்கைப்பெயர் சேர்ந்து வினைகொண்டு முடியும்போது முன்னிலைப் பன்மைவினை முற்றோடு முடியும்.

(உ-ம்.) நீயும் அவனும் போனீர்.

89. உயர்திணைப் பெயரையும் அஃறிணைப் பெயரையும் எண்ணி ஒருவினைகொண்டு முடிக்கும்போது பலர்பால் வினைமுற்றைக்கொண்டு முடிக்கவேண்டும்.

(உ-ம்.) அரசனும் குதிரையும் போனார்கள்

90. உயர்திணையாக வருதல் தன்மைப்பெயரோடு அஃறிணைப்பெயர் சேர்ந்துவந்தால தன்மைப்பன்மை வினைமுற்றைக்கொள்ளும்.

(உ-ம்.) நானும் நாயும் போனோம்

91. உயர்திணை மூன்றுபால் பெயர்களுக்கும் பயனிலையாகவரும் யார் என்பதை வினவடியாகப் பிறந்த குறிப்புவினை முற்றென்க.

(உ-ம்.) அவன்யார், அவள்யார், அவர்யார்

# இடையியல்.

1. வேற்றுமை யுருபுகளும், விகுதிகளும், இடைநிலைகளும், சாரியைகளும், வினவெழுத்துகளும், சுட்டெழுத்துகளும், போல- ஆங்கு முதலிய உவமைச் சொற்களும் இடைச்சொற்களாம்.

2. இவைகளே யல்லாமல் தத்தம்பொருளைக்காட்டும் இடைச்சொற்களும் உண்டு. அவை:—ஏ—ஓ-உம்-மற்று- கொல் - என்று- முன் - பின் - தான்.

3. ஏகாரம் நான்கு பொருளைத்தரும்:—பிரிநிலை-தேற்றம்-வினா-ஈற்றசை. பிரிநிலை=ஒரு கூட்டத்தினின்றும் பிரித்தல். தேற்றம்=துணிவு. ஈற்றசை=மொழிக்குக் கடைசியில் யாதொரு பொருளுமின்றிவருதல்.

(உ-ம்.)

| | |
|---|---|
| இராமனே செய்தான் | மற்றவர்கள் செய்யவில்லை என்பதினால் பிரிநிலை |
| கடவுளே உயர்ந்தவர் | துணிந்து சொல்லுதலால் தேற்றம். |
| நீயே செய்தாய் | நீயா? என்பதினால் வினா. |
| தொழுவோம் யாமே | ஈற்றசை. |

4. ஓகாரம் ஐந்து பொருளைத்தரும்:—ஐயம் - எதிர்மறை- வினா - உயர்வு சிறப்பு - இழிவுசிறப்பு.

(உ-ம்.) வந்தவன் இராமனோ கிருஷ்ணனோ-ஐயம்
நானோ செய்தேன் - எதிர்மறை

இராமனோ செய்தான் — வினா
ஓ ஓ பெரியவர் — உயர்வுசிறப்பு
ஓ ஓ கொடிது — இழிவுசிறப்பு

5. உம்மை எழுபொருளைத்தரும். எதிர்மறை - உயர்வு சிறப்பு, இழிவுசிறப்பு, ஐயம் - எச்சம, முற்று - எண்.

(உ-ம்.) செய்யவும் கூடும் — எதிர்மறை
பார்ப்பாரும் வந்தார்கள் — உயர்வுசிறப்பு
புலையனும் விரும்பாதயாக்கை — இழிவுசிறப்பு
பத்தாயினும் எட்டாயினுங்கொடு — ஐயம
இராமனும் வந்தான் — எச்சம்
இரண்டு கண்ணும் சிவந்தன — முற்று
இராமனும கிருஷ்ணனும வந்தார்கள் — எண்

6. மற்று என்பதுபிறிதுஎன்னும்பொருளில்வரும்
(உ-ம்.) இவனுக்குப்பதில் மற்றொருவனை அனுப்பு

7. கொல் என்பது ஐயப்பொருளைத் தரும். ஐயம்=சந்தேகம்.

(உ-ம்.) வருவான்கொல்.

8. என்று என்பது நான்குபொருளைத்தரும். வினைப்பொருள், பெயர்ப்பொருள், எண்ணுபொருள், பண்புப்பொருள்.

(உ-ம்) வருவேன் என்றுசொன்னான், வினையை அடுத்துவந்தபடியால் வினைப்பொருள்.

இவனுக்கு இராமன் என்றுபெயர். பெயரை அடுத்து வந்தபடியால் பெயர்ப்பொருள்.

கல்வியென்று பொருளென்று செல்வம் இரண்டுவகை. இதில் கல்வியையும் பொருளையும் என்று வந்தால் எண்ணுப்பொருள.

அது மிகவும் அழகென்று கேள்வி. பண்புப்பெயரை அடுத்துவந்த படியால் பண்புப்பொருள.

9 காலப்பொருளையும், இடப்பொருளையும் தரும் முன் பின் என்னும் இடைச்சொற்கள் வேற்றுமையேற்று இடப்பொருளில் வரும்.

| | |
|---|---|
| முன் பிறந்தான்<br>பின் பிறந்தான் | முன் = முன்காலத்தில்<br>பின் = பின்காலத்தில். |
| முன் உட்கார்ந்தான்<br>பின் உட்கார்ந்தான் | முன் = முன்னிடத்தில்.<br>பின் = பின்னிடத்தில். |

10 தான் என்பது தேற்றப்பொருளில் வரும். (உ-ம்) எனக்கு அதுதான் வேண்டும் அதுதான் = அதுவே.

## உரியியல்.

1. உரிச்சொல் ஒருகுணத்தையும், பலகுணத்தையும் காட்டும்.

2 ஒரு குணத்தைக் காட்டும் உரிச்சொற்கள்.

சால, உறு, தவ, நனி, கழி, கூர் இவைமிகுதி என்கிற ஒருகுணத்தைக் காட்டின.

(உ-ம்.) சாலச் செய்வாரோ தலைப்படுவர், உறுபொருள், தவப்பாதகன, நனி இனிதே, இருள்கூர் சிறுநெறி, கல்வியாறுப கழிபட்டம.

3. பல குணத்தைக்காட்டும் உரிச்சொல்.

(உ-ம்.) கடி. இது கூர்மை, வாசனை, காவல், ஒளி, அச்சம், புதுமை, மிகுதி, விரைவு முதலிய பல குணங்களைக் காட்டும்.

4. முன்சொன்ன இடைச்சொற்களினின்றும், இவ்வுரிச்சொற்களினின்றும் பெயர்ப்பகுபதங்களும் வினைப்பகுபதங்களும் பிறக்கும்.

(உ-ம்.)

இடைப்பெயர்ப் பகுபதம் - மற்றவன் (பகுதி-மற்று)
உரிப்பெயர்ப்பகுபதம் - உறுவர் = முனிவர் (பகுதி-உறு)
இடைவினைப்பகுபதம் - என்றான் (பகுதி-என்)
உரிவினைப்பகுபதம் - கூர்ந்தான் = மிகுந்தான் (பகுதி-கூர்.)

## பொதுவியல்.

1. சொல் இரண்டுவகையாகப் பொருளை யுணர்த்தும். வெளிப்படை-குறிப்பு.

2. வெளிப்படைச் சொல்லாவது குறிப்பாகப் பொருளை யுணர்த்தாமல் வெளிப்படையாகப் பொருள்தருஞ் சொல்லாம்.

(உ-ம்.) நிலம், நீர், செய்தான், போனான்.

3. குறிப்புச் சொல்லாவது குறிப்பினால் இருதிணை ஐம்பாற் பொருள்களைத்தரும் சொல்லாம். அது ஒன்பதுவகைப்படும்.

ஒன்றொழி பொதுச்சொல், விகாரம், தகுதி வழக்கு, ஆகுபெயர், அன்மொழித்தொகை, குறிப்புவினை, முதற்குறிப்பு, தொகைக்குறிப்பு, பிறகுறிப்பு.

(உ-ம்.) ஆயிரமக்கள் போர்செய்தார்கள், இதில் மக்கள் என்னும் பொதுப்பெயரும், செய்தார்கள் என்னும்

ஆத்திசூடி படித்தான், இந்த முதற்குறிப்பு படித்தான் என்னும் குறிப்பால் ஆத்திசூடி என்னும் சொற்களை முதலிலுடைய புஸ்தகத்தைத் தெரிவித்தது.

ஐவர்களில் தருமன் மூத்தவன், இந்த ஐவர்கள் என்னும் தொகைக்குறிப்புப்பெயர் தருமனை என்னும் குறிப்பால் பாண்டவரைக் காட்டிற்று.

கல்லைக்கடிக்க நன்றாய்ச்சமைத்காய், பரியா வேகாகை, பறவா கொக்கு என்னும் பிறகுறிப்புகள் கல்லைக்கடிக்க, என்னும் குறிப்பால் நன்றாய்ச்சமைக்கவில்லை என்றும், பரியா என்பதனால் வேகாகைமரம் என்றும், பறவா என்பதனால் குதிரை என்றும் தெரிவித்தன.

4. ஆகுபெயராவது ஒருபொருளின் இயற்பெயர் அப்பொருளுக்குச் சம்பந்தமான வேறொரு பொருளுக்கு ஆகிவருவது.

5. அவ்வாகு பெயர்பதினாறுவகைப்படும்.

அவை பொருளாகுபெயர், இடவாகுபெயர், காலவாகுபெயர், சினையாகுபெயர், குணவாகுபெயர், தொழிலாகுபெயர், எண்ணலளவையாகுபெயர், முகத்தலளவையாகுபெயர், நீட்டலளவையாகுபெயர், சொல்லாகுபெயர், தானியாகுபெயர், கருவியாகுபெயர், காரியவாகுபெயர், கர்த்தாவாகுபெயர், உவமையாகுபெயர் என்பவைகளாம்.

(உ-ம)

தாமரைபோன் முகத்தை. தாமரையென்னும் கொடியாகிய முதற்பொருளின் பெயர் அதனைச்சினையாகிய பூவுக்கு வந்தபடியால் பொருளாகு பெயர் அல்லது முதலாகு பெயர்.

பட்டணமெல்லாம் திரண்டுவந்தது. பட்டணம் என்னும் இடத்தின் பெயர் அதிலுள்ள மனிதர்களுக்கு ஆனதால் இடவாகுபெயராம்.

கார் அறுத்தான். காரென்னும் மழைகாலத்தின் பெயர் அக்காலத்தில் விளையும்பயிருக்கு ஆனதால் காலவாகுபெயராம்.

வெற்றிலை நட்டான். வெற்றிலையென்னும் சினையின் பெயர் அதனை முதலாகிய கொடிக்கு ஆனதால் சினையாகு பெயராம்.

வெள்ளை வந்தது. வெள்ளையென்னும் குணத்தின்பெயர் அந்த நிறமுடைய ஒருமாட்டுக்கு ஆனதால் குணவாகுபெயர் அல்லது பண்பாகுபெயராம்.

வற்றல் உண்டான். வற்றுதல் என்னும் தொழிலின் பெயர் அந்தத்தொழிலையுடைய பதார்த்தத்திற்கு வந்த படியால் தொழிலாகுபெயராம்.

காலால் நடந்தான் கால்என்னும் எண்ணலளவையின் பெயர் அவ்வளவைக்கொண்ட உடம்பின் உறுப்புக்கு வந்தபடியால் எண்ணலளவையாகு பெயராம்.

இச்சர்க்கரை ஒருமணங்கு. மணங்கு என்னும் எடுத்தலளவையின்பெயர் அவ்வளவைக்கொண்ட சர்க்கரைக்குவந்த படியால் எடுத்தலளவையாகு பெயராம்.

படி உடைந்தது - படிஎன்னும் முகத்தலளவையின் பெயர் அவ்வளவையைக்கொண்ட அளக்கும் கருவிக்கு ஆனபடியால் முகத்தலளவை யாகுபெயராம்.

இந்தத் துணி நான்கு கஜம். கஜம் என்னும் நீட்டலளவையின் பெயர் அவ்வளவைக் கொண்ட துணிக்கு ஆனபடியால் நீட்டலளவையாகு பெயராம்.

அந்தப் பாட்டிற்கு உரை எழுது. உரை என்னும் சொல்லின்பெயர் அந்தச் சொல்லால் சொல்லும் அர்த்தத்திற்கு ஆனபடியால் சொல்லாகு பெயராம்.

விளக்கு முறிந்தது. விளக்கு என்னும் தானியாகிய தீபத்தின்பெயர் அது இருந்தற்கு இடமாகிய தண்டிற்கு ஆனபடியால் தானியாகுபெயராம். தானி=இடத்தை யுடையது.

திருவாய்மொழி படித்தான். திருவாய்மொழி என்னும் சொற்களாகிய காரணத்தின்பெயர் அந்தச் சொற்களால் ஆன புத்தகத்திற்கு வந்தபடியால் காரணவாகுபெயர் அல்லது கருவியாகுபெயராம்.

இந்தப் புத்தகம் இலக்கணம். இலக்கணம் என்னும் அப்புத்தகத்திற் சொல்லும் காரியத்தின் பெயர் அதன் காரணமாகிய புத்தகத்துக்கு ஆனபடியால் காரியவாகுபெயராம்.

திருவள்ளுவர் படித்தான். திருவள்ளுவர் என்னும் நூலாசிரியர் பெயர் அவர் செய்த நூலுக்கு ஆதலால் கர்த்தாவாகுபெயராம்.

காளை வந்தான். காளை என்னும் உவமானத்தின்பெயர் அதுபோலும் நடையையுடைய மனிதனுக்கு ஆனபடியால் உவமையாகு பெயராம்.

திருவாய்மொழி படித்தான், வெற்றிலை நட்டான் என்பவைகளிலுள்ள மொழி இலை என்னும் ஆகுபெயர்ச்சொற்கள் திருவாய்; வெறு என்னும் அடைமொழிகளை அடுத்துவந்தபடியால் அடையடுத்தவாகுபெயர்களாம்.

6. திணை, பால், இடங்களுக்குப் பொதுவாகிய பெயர்வினைகளின் பொதுத்தன்மையை அவையவையடுத்து வரும் சிறப்புப்பெயரும், சிறப்புவினையும் நீக்கும்.

(உ-ம்.)

| | |
|---|---|
| தாய் இவள்<br>தாய் இது | தாய் என்பதின் திணைப்பொதுமையை இவள், இது என்னும் சிறப்புப்பெயர்கள் நீக்கின. |
| மரம் வளர்ந்தது<br>மரம் வளர்ந்தன | மரம் என்பதின் பாற்பொதுமையை வளர்ந்தது, வளர்ந்தன என்னும் சிறப்பு வினைகள் நீக்கின. |
| நாம் எல்லாம் வந்தோம்<br>நீங்கள் எல்லாம் வந்தீர்கள்<br>அவர் எல்லாம் வந்தார்<br>அவை எல்லாம்வந்தன. | எல்லாம் என்பதின் இடப்பொதுமையையும் திணைப் பொதுமையையும் சிறப்புப் பெயர் வினைகள்வந்து நீக்கின. |
| வாழ்க அவன், அவள்,<br>அவர், அது, அவை,<br>யான், யாம்,<br>நீ, நீர், | வாழ்க என்னும் வினையின் திணைபாலிடந்தன்மைகளைச் சிறப்புப் பெயர்கள் வந்து நீக்கின. |

7. பொருட் புணர்ச்சி இரண்டுவகைப்படும்:—வேற்றுமைப்புணர்ச்சி - அல்வழிப்புணர்ச்சி.

8. வேற்றுமைப் புணர்ச்சியாவது இரண்டாம், மூன்றாம், நான்காம், ஐந்தாம், ஆறாம், ஏழாம், வேற்றுமையுருபுகள் நிலைமொழிக்கும் வருமொழிக்கும் நடுவில் மறைந்தும் வெளிப்பட்டும் வருவது.

9. அவ்வேற்றுமைப் புணர்ச்சி தொகைநிலைத் தொடர், தொகாநிலைத்தொடர் என இரண்டுவகைப படும்.

10. வேற்றுமைத் தொகைநிலைத் தொடராவது இரண்டாம் வேற்றுமைமுதல் ஏழாம் வேற்றுமை வரையில் உள்ள ஆறுவேற்றுமை யுருபுகளும் நிலைமொழிக்கும் வருமொழிகளும் நடுவில மறைந்து வருவதாம்.

11. வேற்றுமைத் தொகாநிலைத் தொடராவது மேலே சொல்லிய ஆறுவேற்றுமை யுருபுகளும் நடுவில் வெளிப்பட்டு வருவதாம்.

(உ-ம்.)

இரண்டாம் வேற்றுமை.

| தொகைநிலை | தொகாநிலை |
|---|---|
| வீடுகட்டினான் | வீட்டைக்கட்டினான் |
| பாடம்படித்தான் | பாடத்தைப்படித்தான் |
| குளம்வெட்டினான் | குளத்தைவெட்டினான் |
| சோறுபோட்டான் | சோற்றைப்போட்டான் |
| குதிரைவாங்கினான் | குதிரையைவாங்கினான் |

மூன்றாம் வேற்றுமை.

| தொகைநிலை | தொகாநிலை |
|---|---|
| கல் எறிந்தான் | கல்லால் எறிந்தான் |
| பொன் மோதிரம் | பொன்னால்செய்த மோதிரம் |
| மண்வீடு | மண்ணால்கட்டிய வீடு |
| கற்சட்டி | கல்லாற்செய்த சட்டி |
| வெள்ளிக்கிண்ணி | வெள்ளியாற்செய்த கிண்ணி |

### நான்காம் வேற்றுமை.

| தொகைநிலை | தொகாநிலை |
|---|---|
| கூலிவேலை | கூலிக்குவேலை |
| தருமசத்திரம் | தருமத்திற்குக்கட்டிய சத்திரம் |
| இராமன் தம்பி | இராமனுக்குத்தம்பி |
| பதவுறை | பதத்துக்கு உறை |
| அரைஞாண் | அரைக்குஞாண |

### ஐந்தாம் வேற்றுமை.

| தொகைநிலை | தொகாநிலை |
|---|---|
| மலைவீழ் ஆறு | மலையினின்று விழும் ஆறு |
| அராபிக்குதிரை | அராபியினின்றுவந்த குதிரை |
| சீனத்துப்பட்டு | சீனாவினின்றுவந்த பட்டு |
| கல்விசிறந்ததேசம் | கல்வியில் சிறந்ததேசம் |
| செல்வம் மிகுந்தநாடு | செல்வத்தில் மிகுந்தநாடு |

### ஆறாம் வேற்றுமை.

| தொகைநிலை | தொகாநிலை |
|---|---|
| இராமன்வீடு | இராமனதுவீடு |
| குளக்கரை | குளத்தினதுகரை |
| வீட்டுக்கூரை | வீட்டினது கூரை |
| மரப்பட்டை | மரத்தினது பட்டை |
| மரக்கிளை | மரத்தினதுகிளை |

### ஏழாம் வேற்றுமை.

| | |
|---|---|
| காடுபுகுந்தான் | காட்டில் புகுந்தான் |
| கைவிரல் | கையில்விரல் |
| நீர்ப்பறவை | நீரில் வாழும் பறவை |
| நீராடினான் | நீரில் ஆடினான் |
| கடல்மீன் | கடலில் உள்ள மீன் |

12. வேற்றுமையுருபும் அவ்வுருபுகொண்டு முடியும் சொல்லும் மறைந்து வருவதற்கு உருபும் பயனும் உடன்தொக்க தொகையென்று பெயராம்.

(உ-ம்)

| | |
|---|---|
| தொகைநிலை | தொகாநிலை |
| நீர்க்குடம் | நீரை (யுடைய) குடம் |
| கற்சுவர் | கல்லால்(கட்டிய)சுவர் |
| தருமபபள்ளிக்கூடம் | தருமத்திற்கு(கற்பிக்கும்)பள்ளிக்கூடம் |
| மலை வீழ் ஆறு | மலையினின்று (விழும்) ஆறு |
| ஏரி நீர் | ஏரியில் (உள்ள) நீர் |

இந்த உருபும் பயனும் உடன் தொக்க தொகைகளில் இரண்டாவது முதலிய வேற்றுமை யுருபுகளுடன் அவைகொண்டு முடியும் உடைய, கட்டிய, கற்பிக்கும், விழும், உள்ள என்னும் பயனிலைகளும் மறைந்து இருத்தல்காண்க.

13. ஆறும் வேற்றுமை யானது உருபும்பயனும் உடன் தொக்க தொகையாக வராது.

14. அல்வழிப் புணர்ச்சியாவது வேற்றுமை யுருபுகள் இடையில் வராமல் நிலைமொழியும், வருமொழியும் சேர்ந்துவருவதாம்.

இந்த அல்வழிப் புணர்ச்சிபதினேழுவகைப்படும். அவை வினைத்தொகை, பண்புத்தொகை, இருபெயரொட்டுப் பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை, எழுவாய்த்தொ

டர், விளித்தொடர், தெரிநிலைப் பெயரெச்சத்தொடர்; குறிப்புப்பெய ரெச்சத்தொடர், தெரிநிலை வினையெச்சத்தொடர், குறிப்புவினையெச்சத்தொடர், தெரிநிலை வினைமுற்றுத்தொடர், குறிப்பு வினைமுற்றுத்தொடர், இடைச்சொற்றொடர், உரிச்சொற்றொடர், அடுக்குத் தொடர்.

15. இந்த அல்வழிப்புணர்ச்சி பதினேழும் தொகைநிலைத்தொடர், தொகாநிலைத் தொடர் என இரண்டு வகைப்படும்.

16. தொகைநிலைத்தொடர் ஆறு.

வினைத்தொகை, பண்புத்தொகை, இருபெயரொட்டுப் பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித் தொகை.

17. (a) வினைத்தொகையாவது பெயரெச்சத்தின் இடைநிலையும் விகுதியும் மறைந்து பகுதிமாத்திரம் நின்று பெயரைக்கொண்டு முடிவது.

(உ-ம்.) ஏறுகுதிரை — அவிர்சடை
சுழல் காற்று — ஓங்குசினம்
மிகுபுனல் — அதிர்வளை
முளிபுல் — ஒலிகடல்
செறியழி — தின்பண்டம்

(b) இவ்வினைத்தொகைகள் விரிந்து வந்தால் முக்காலப் பெயரெச்சங்களாகும்.

(உ-ம்.) ஏறுகுதிரை — ஏறினகுதிரை
ஏறுகிறகுதிரை
ஏறும்குதிரை

(c) சில வினைப்பகுதிகள் விகாரப்பட்டு வினைத்தொகைகளாக வரும்.

(உ-ம்.)

| | |
|---|---|
| தருபொருள் | இங்கு-தா, வா, நட, இற, கொடு என்னும் பகுதிகள் தரு, வரு, நடக்கிடு, இறந்திடு, கொடுத்திடு என விகாரப்பட்டுவந்தன. |
| வருபொருள் | |
| நடக்கிடு குதிரை | |
| இறந்திடு குதிரை | |
| கொடுத்திடு பொருள் | |

18. பண்புச்சொல்லுக்கும், பெயர்ச்சொல்லுக்கும், மத்தியில் ஆகிய என்னும் பண்புருபுமறைந்து வருவது பண்புத்தொகையாம.

பண்புச்சொல் வண்ணம்,வடிவு,அளவு, சுவை என நான்குவகைப்படும். ஆகையால பண்புத்தொகையும் நாலுவகையாம.

(உ-ம்.)

| | |
|---|---|
| வண்ணப் பண்புத்தொகை | வடிவுப் பண்புத்தொகை |
| கருங்குதிரை | வட்டக்கல் |
| செந்தாமரை | துரப்பலகை |
| வெணமணல் | நெடுங்கடல் |
| பசுங்காய் | சிறுவீடு |
| அளவுப்பண்புத்தொகை | சுவைப்பண்புத்தொகை |
| ஒருபொருள் | துவர்க்காய் |
| இருவினை | புளிக்கறி |

| | |
|---|---|
| முக்குணம் | உவர் நீர் |
| நாற்பொருள் | புளிங்தயிர் |

இவை-கருமையாகிய, வட்டமாகிய, ஒன்ருகிய, துவர்ப்பாகிய எனவிரியும்.

19. பொதுப்பெயருக்கும் சிறப்புப்பெயருக்கும், நடுவில் ஆகிய என்னும் உருபுமறைந்து வருவது இருபெயரொட்டுப் பண்புதத்தொகையாம்.

(உ-ம்.)

| | |
|---|---|
| சாரைப்பாம்பு<br>மாமரம்<br>பரிமா<br>கானகம் | நிலைமொழி சிறப்புப பெயரும், வருமொழி பொதுப்பெயரும் என்று அறிக. இப்படி வருவதே பெரும்பான்மை. |

சாரையாகிய பாம்பு எனவிரியும். சாரை ஒருஜாதிப்பாம்புக்கே பெயராதலால் சிறப்புப் பெயர். பாமபு பலஜாதிப பாமபுக்கும பெயர் ஆதலால் பொதுப்பெயர். மற்றவைகளும் இப்படியே.

20. உவமானத்துக்கும உவமேயத்துக்கும் நடுவில் போல் என்னும் உவமஉருபு மறைந்து வருதல் உவமத்தொகையாம்.

21. அது வினையுவமைத்தொகை, பயனுவமைத்தொகை, மெய்யுவமைத்தொகை, உருவுவமத்தொகை என நாளுகுவகைப்படும்.

1. வினையுவமைத்தொகையாவது தொழிலைப் பற்றி உவமையாகவருவது.

(உ-ம்.) குருவிகூப்பிட்டான் — குரங்காட்டம்
புலிக்கொற்றன் — சக்கரம்கறங்கினன்.

2. பயனுவமைத் தொகையாவது பிரயோசனத்தைப்பற்றி உவமையாக வருவது.

(உ-ம்.) மழைக்கை, கிளிமொழி, கற்பகக் கொடையான்.

3. மெய்யுவமைத்தொகையாவது உருவத்தைப்பற்றி உவமையாகவருவது.

(உ-ம்.) உடுக்கையிடை — மதிமுகம்
மலைப்புயம் — பிறைநுதல்

4. உருவுவமைத்தொகையாவது நிறத்தைப்பற்றி உவமையாகவருவது.

(உ-ம்.) பவளவாய் — குவளைக்கண்
முத்துப்பல் — பால்வண்ணன்

குருவிபோல் கூப்பிட்டான் என விரியும். மற்றவைகளும் இப்படியே.

22. நடுவிலும் கடைசியிலும் உம் என்னும் இடைச்சொல் மறைந்துவருவது உம்மைத்தொகையாம்.

அது எண்ணலளவை, எடுத்தலளவை, முகத்தலளவை, நீட்டலளவைகளால் நான்குவகைப்படும்.

| | |
|---|---|
| எண்ணலளவை | முகத்தலளவை |
| ஒன்றேகால் | படியாழாக்கு |
| இரண்டேமுக்கால் | படியுழக்கு |
| மூன்றரை | கலனேதூணி |
| நாலரை | பதக்கேநாழி |

| | |
|---|---|
| எடுத்தலளவை | நீட்டலளவை |
| கழஞ்சேகால் | சாணங்குலம் |

ஒன்றுங்காலும் கழஞ்சுங்காலும், படியும் ஆழாக்கும், சாணும் அங்குலமும் என்றுவிரியும்.

23. வேற்றுமைத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகைகளின் புறத்தில் (வெளியில்) வேறுசொல் மறைந்து வருவது அன்மொழித்தொகையாம்.

| | |
|---|---|
| வேற்றுமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை | வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. |
| பூங்குழல் வந்தாள் | தாழ்குழல் வந்தாள் |
| பொற்றொடி வந்தாள் | ஈர்வளை வந்தாள் |
| பண்புத்தொகைப் புறத்துப் பிறந்தது | உவமைத்தொகைப் புறத்துப் பிறந்தது |
| கருங்குழல் வந்தாள் | பிறைநுதல் வந்தாள் |
| பொற்றொடி வந்தாள் | வேல்விழி வந்தாள் |

உம்மைத்தொகைப்புறத்துப்பிறந்தது

உயிர்மெய் இது.

நீர்மோர் கொடுத்தான்.

பூவை முடித்த கூந்தலையுடையபெண். ஈர்ந்த வளையலை அணிந்தபெண். கருமையாகிய குழலையுடைய பெண். பிறைபோன்ற நுதலையுடையபெண். உயிரும் மெய்யும் கூடிப்பிறந்த எழுத்து எனவிரியும். இவைக

னிசு அல்லாத மொழிகள் பெண், எழுத்து. மற்றவைக ளும் இப்படியே விரியும்.

24. நிலைமொழி முதல்வேற்றுமையாகவும், விளி வேற்றுமையாகவும், தெரிநிலைப் பெயரெச்சமாகவும், குறிப்புப் பெயரெச்சமாகவும், தெரிநிலை வினையெச்ச மாகவும், குறிப்புவினையெச்சமாகவும், தெரிநிலைவினைமு ற்றாகவும், குறிப்புவினைமுற்றாகவும், இடைச்சொல்லாக வும், உரிச்சொல்லாகவும், நின்றால் அவை முறையே எழுவாய்த்தொடர், விளித்தொடர், தெரிநிலைப்பெய ரெச்சத்தொடர், குறிப்புப் பெயரெச்சத்தொடர், தெ ரிநிலை வினையெச்சத்தொடர், குறிப்பு வினையெச்சத் தொடர், தெரிநிலை வினைமுற்றுத்தொடர், குறிப்பு வி னைமுற்றுத்தொடர், இடைச்சொற்றொடர், உரிச்சொ ற்றொடர் என்று சொலலப்படும.

(உ-ம்.)

| எழுவாய்த்தொடர் | விளித்தொடர் |
|---|---|
| இராமன் வந்தான் | இராமா வா |
| மரம் வளர்ந்தது | அண்ணா போ |
| நான் செய்தேன் | பாவிகாள் கேளீர் |
| நீ போனாய் | ஐயாவா |
| **தெரிநிலைப்பெய ரெச்சத்தொடர்** | **குறிப்புப்பெய ரெச்சத்தொடர்** |
| வந்த மாடு | நல்லகாலம் |
| சென்ற மனிதன் | சிறியவீடு |
| நின்ற குதிரை | புதியமாடு |
| படிக்கும் பாடம் | பழயவண்டி |

| தெரி-வினையெச்சத் தொடர் | குறி-வினையெச்சத் தொடர் |
|---|---|
| வந்துபோனான் | வலிய வந்தான் |
| இருக்கவந்தான் | மெல்லச் செய்தான் |
| செய்தால் கொடுப்பான் | சிறிது பேசினான் |
| கொடுத்துப்போனான் | நெடிது சென்றான் |
| **தெரி-வினைமுற்றுத்தொடர்** | **குறி-வினைமுற்றுத்தொடர்** |
| வந்தான் இராமன் | பெரியன் இராமன் |
| கொடுத்தேன் நான் | கரியன் அவன் |
| செய்தாய்நீ | பெரியது மரம் |
| வாழ்க இராமா | சிறியன பசுக்கள் |
| **இடைச்சொற்றொடர்** | **உரிச்சொற்றொடர்** |
| மற்றொன்று | சாலச்செய்வார் |
| ஓ பெரிது | கழிமுடை |
| ஆ சிறியது | மாநகரம் |
| (இராம)னும்போனான் | நனிஇனிது |

25. அடுக்குத் தொடராவது ஒரு சொல்லையே இரட்டித்துச் சொல்வது.

(உ-ம்.) பாம்பு பாம்பு  கொடிது கொடிது
நெருப்பு நெருப்பு  வந்தேன் வந்தேன்

26. தொகைநிலைத்தொடர்களில் முன்மொழியிலும், பின்மொழியிலும், பலமொழிகளிலும், புறமொழியிலும் பொருள் சிறந்து நிற்கும்.

(உ-ம்.) செந்தாமரை, தாமரைப்பூ முன்மொழிகளில் பொருள் சிறந்தன.

கண்ணிமை, வெண்மதி, உப்பளம். பின்மொழிகளில் பொருள் சிறந்தன.

வெற்றிலைப்பாக்கு, இராப்பகல், சேரசோழபாண்டியர் பலமொழிகளிலும் பொருள் சிறந்தன. தேன் மொழி, கருங்குழல் இவைகளையுடைய பெண் என்னும் சொல்லில பொருள் சிறந்தது.

27. உயர்திணை ஒருமைப்பெயர் உம்மைதொகையாகவந்தால பலர்பால விகுதியால் முடியும்.

(உ-ம்.) இராமலட்சுமணர், சேரசோழ பாண்டியர், நகுல சகாதேவர், இராவண கும்பகருணர்.

28. அஃறிணை ஒருமைப்பெயர்களும், இருதிணைக்கும் பொதுவான ஒருமைப்பெயர்களும், உம்மைத்தொகையாகவந்தால் ஈற்றில் பன்மை விகுதியைபெற்றும் பெறாமலும் வரும.

(உ-ம்.)

| | |
|---|---|
| ஆடுமாடுகள். | ஆடு மாடு |
| குளங்குட்டைகள் | குளங்குட்டை |
| தாய் தந்தைகள் | தாய் தந்தை |
| மாதா பிதாக்கள் | மாதா பிதா |

29. சிலதொகை நிலைத்தொடர்கள் இரண்டுமுதல் ஏழுவகைப் புணர்ச்சிகளாக மயங்கிவரும்.

(உ-ம்.) கடவுள் வணக்கம் என்பதை கடவுளை வணங்குமவணக்கம், கடவுளுக்குவணக்கம் என இரண்டாம் வேற்றுமையாகவும் நாலாம்வேற்றுமையாகவும் கொள்ளலாம்.

தற்சேர்ந்தார் என்பதை தன்னைச்சேர்ந்தார், தன்னோடு

சேர்ந்தார், தன்னிடத்தில் சேர்ந்தார் என மூன்றுவகைப் புணர்ச்சியாகக் கொள்ளலாம்.

சொல்லிலக்கணம என்பதை சொல்லினது இலக்கணம், சொல்லுக்கு இலக்கணம், சொல்லில் இலக்கணம், சொல்லிலக்கணம் சொன்னநூல் என நான்குவகைப்புணர்ச்சியாகக் கொள்ளலாம். சொல்லிலக்கணஞ் சொன்னநூல் என்பது அன்மொழித்தொகை.

பொன்மணி என்பதை பொன்னாலாகிய மணி, பொன்னேகிய மணி, பொன்னில் பதித்தமணி, பொன்னேடுசேர்ந்த மணி, பொன்னும் மணியும் என ஐந்து வகைப் புணர்ச்சிகளாகக் கொள்ளலாம்.

மரவேலி என்பதை மரத்தைக்காக்கிறவேலி, மரத்தாலாகியவேலி, மரத்துக்குவேலி, மரத்தினதுவேலி, மரத்தின்புறத்துவேலி, மரமாகியவேலி என ஆறுவகைப்புணர்ச்சிகளாகக் கொள்ளலாம்.

சொற்பொருள் என்பதை சொல்லால் அறியப்படுகிற பொருள், சொல்லுக்குப்பொருள், சொல்லினதுபொருள், சொல்லில்பொருள், சொல்லானதுபொருள், சொல்லாகிய பொருள், சொல்லும் பொருளும் என ஏழுவகைப் புணர்ச்சிகளாகக் கொள்ளலாம்.

30. (a) பெயரெச்சம், வினையெச்சம், உம்மையெச்சம், பிரிநிலையெச்சம், எனவெச்சம், எதிர்மறையெச்சம், குறிப்பெச்சம், ஒழியிசையெச்சம், இசையெச்சம், சொல்லெச்சம் என்கிற இந்தப் பத்துவகை எச்சங்களும் தமது எச்சச்சொற்களாகிய பெயர் வினைகளைக் கொண்டுமுடியும்.

(b) ஒழிபிசை யெச்சமாவது குறைந்து வருகிற சில சொற்களைத் தழுவி நிற்பது.

(c) இசை யெச்சமாவது பொருள்விரித்துச் சொல்வதற்கு வேண்டிய ஒன்றும் பலவுமாகிய சொற்கள் மறைந்து வருவது.

(d) சொலலெச்சமாவது சொல் என்னும் வார்த்தை மறைந்து வருவது.

(உ-ம்.)

உண்டமனிதன், உண்ட என்னும் பெயரெச்சம் தன் எச்சமாகிய (குறைவாகிய) மனிதன் என்னும் பெயரைக்கொண்டது.

உண்டுபோனான், உண்டு என்னும் வினையெச்சம் தன் எச்சமாகிய போனான் என்னும் வினைச்சொல்லைக்கொண்டது

இராமனும் வந்தான், உம் என்னும் உம்மையெச்சம் தன் எச்சமாகிய முன்னே லக்ஷ்மணன் வந்ததல்லாமல் என்கிற சொற்களைக்கொண்டது.

இராமனே கொண்டான், ஏ என்னும் பிரிநிலை எச்சம் தன்னெச்சமாகிய பிறர் கொள்ளவில்லை என்னும் சொற்களைக்கொண்டது.

கல்லென நகைத்தான், என என்னும் எனவெச்சம் தன் எச்சமாகிய நகைத்தான் என்னும் வினையைக்கொண்டது.

நானோசெய்தேன், ஓ என்னும் எதிர்மறை எச்சம் தன் எச்சமாகிய செய்யவில்லை என்னும் வினைகளைக்கொண்டது.

கல்லைக்கடிக்க நன்றாய்ச்சமைத்தாய், கல்லைக்கடிக்க என்னும் குறிப்பெச்சம் தன் எச்சமாகிய நன்றாய்ச்சமைக்கவில்லை என்னும் வினையைக்கொண்டது.

புதிய புஸ்தகம் காண், படிக்கவோ வந்தான், புதிய புஸ்தகம் காண்,படிக்கவோ என்னும் ஒழியிசை யெச்சங்கள் தம் மெச்சங்களாகிய "இப்பொழுதுங்கிழிந்தது" "விளையாடவந்தானா" என்னும் சொற்களைக்கொண்டது

கற்றதனால் ஆயபயன் என்சொல், கற்றதனால் என்னும் இசை எச்சம் தன் எச்சமாகிய "ஒருவனை பலநூல்களை நன்றாய்" என்னும் சொற்களைக்கொண்டது.

வருவேன் என்றான், என்றான் என்னும் சொல்லெச்சம் தன் எச்சமாகிய "சொல்" என்னும் சொல்லைக்கொண்டது.

31. செய்யுளில் பெயர் வினைகளின் ஈற்றில் உள்ள ன், ள், ர், ய், மெய்களின் அயல் ஆகாரம் ஓகாரமாகும்.

| | |
|---|---|
| நல்லான்=நல்லோன். | வந்தான்=வந்தோன். |
| நல்லாள்=நல்லோள். | வந்தாள்=வந்தோள். |
| நல்லார்=நல்லோர். | வந்தார்=வந்தோர். |
| நல்லாய்=நல்லோய். | வந்தாய்=வந்தோய். |

32. வேற்றுமை யுருபுகள் கலந்து அடுக்கி வந்தாலும், கலவாமல் அடுக்கிவந்தாலும் ஒருமுடிக்குஞ் சொல்லைக்கொண்டு முடியும்.

(உ-ம்.) அரசன் பகைவனை வாளால்வெட்டினான். முதல் வேற்றுமையும், இரண்டாம் வேற்றுமையும், மூன்றாம் வேற்றுமையும்கலந்து அடுக்கிவந்துவெட்டினான் என்னும் ஒரு முடிக்குஞ் சொல்லைக்கொண்டன.

இராமனையும் கிருஷ்ணனையும் கூப்பிட்டான், இரண்டாம் வேற்றுமையுருபு வேறு வேற்றுமை யுருபுகளுடன்

கலவாமல் அடுக்கிவந்து ஒருமுடிக்குஞ் சொல்லைக்கொண்டது

வாள் கைக்கொண்டான் - இரண்டாம் வேற்றுமையுருபும் ஏழாம்வேற்றுமையுருபும் மறைந்து கலவாது அடுக்கிவந்து ஒரு முடிக்குஞ் சொல்லைக்கொண்டன.

அருள் அறம் உடையான் - இரண்டாம் வேற்றுமையுருபு மறைந்து, வேறு வேற்றுமைகளுடன் கலவாமல் அடுக்கிவந்து ஒரு முடிக்குஞ் சொல்லைக்கொண்டது.

33. வினைமுற்றும், பெயரெச்சமும், வினையெச்சமும் வேறுவகை வினைகளுடன் கலவாமல் தனித்தனி அடுக்கிவந்தால் ஒரு முடிக்குஞ் சொல்லைக்கொண்டு முடியும்.

(உ-ம்)

ஆடினன் பாடினன் இராமன்
கற்ற கேட்ட பெரியோர்
அடிப் பாடி அமர்ந்தான்

வினைமுற்றும், பெயரெச்சமும், வினையெச்சமும் கலவாமல் அடுக்கிவந்து ஒரு முடிக்குஞ் சொல்லைக்கொண்டன.

34. இடைப்பிறவரலாவது வேற்றுமை உருபுகளும், வினைமுற்றுகளும், பெயரெச்சங்களும், வினையெச்சங்களும் ஆகிய இவைகளுக்கும் இவைகொண்டு முடியும் சொற்களுக்கும் நடுவில் அவ்விடத்துக்குப் பொருத்தமுடையனவாய் வருஞ் சொற்களாம்.

(உ-ம்)

| | |
|---|---|
| சாத்தன் (வயிறுநிரம்ப) உண்டான் | வயிறுநிரம்ப முதலியவை இடைப் பிறவரல. |
| அறத்தை (நன்குகச்) செய்தான் | |
| வந்தான் (நேற்றுப்போன) இராமன் | |
| வந்த (தென்தேசத்துப) பிராமணன் | |
| வந்து (தன்றூர்க்குப) போனான் | |

35. வினைமுற்றும், வினையெச்சமும் முடிக்குஞ் சொல்லுக்குமுநலில் வருவதுமல்லாமல் கடைசியிலு ம் வரும்.

(உ-ம்.) வந்தான் இராமன் என்பது இராமன் வந்தான் என்றும், வந்துபோனான் என்பது போனான் வந்து என்றும் வருதல்காண்க.

36. ஆறும்வேற்றுமை யொழிந்த மற்ற எழுவே ற்றுமைகளும் முடிக்கும வினைக்கு ஈற்றிலும் வரும்.

(உ-ம.)

வந்தான் இராமன். வந்தான் பட்டணத்திலிருந்து
வெட்டினான் மரத்தை. போனான் வீட்டிம்
செய்தான் இராமனல் வா அணை
கொடுத்தான் இராமனுக்கு

37. வேற்றுமைகள் முடிக்குஞ்சொல்லுக்கு ஈற் றில்வரும்போது இரண்டாம் வேற்றுமை மாத்திரம தொகையாக வரும்.

(உ-ம்.) கட்டினான் வீடு. படித்தான் பாடம்.

38. சிலசொறகள் வினைகொண்டு முடியும்போது தன் இனத்தைத் தெரிவிக்கும்.

(உ-ம்.) நஞ்சுண்டவன் சாவான் என்றால் நஞ்சுண்டவள் சாவாள், நஞ்சுண்டவர் சாவார், நஞ்சுண்டது சாகும், நஞ்சுண்டவை சாகும் என மற்றபால்களையுந் தழுவுதல்காண்க.

39. திணையும், பாலும், இடமும், காலமும், வினாவும், விடையும், மரபும் ஆகிய இந்த ஏழும் தப்பாகவந்தால் வழுவாம். வழு = தப்பு.

(உ-ம்.)

| வழு. | | வழாநிலை. |
|---|---|---|
| அரசன் வந்தது-திணைவழு | | அரசன் வந்தான் |
| அவன்வந்தார்-பால்வழு | | அவன் வந்தான் |
| நான் வந்தான்-இடவழு | | நான் வந்தேன் |
| நாளை வந்தான-காலவழு | | நாளைவருவான். |
| ஒரு விரலைக்காட்டிச் சிறிதா பெரிதா என்பது. | வினாவழு | இரண்டு விரலைக்காட்டி எதுபெரிது? எதுசிறிது? என்பது. |
| கடலுக்குச் சென்னை எந்தத் திசையில் இருக்கிறது என்றவனுக்குஎன்வண்டி முப்பதுவராகன் என்பது. | விடைவழு | கடலுக்குமேற்கிலிருக்கிறது என்பது. |
| நாய்க்கன்று. | மரபுவழு. | நாய்க்குட்டி. |

40. திணை ஐயத்தையும், பால் ஐயத்தையும் அதனதன் பொதுச்சொல்லால் சொல்லவேண்டும்.

(உ-ம்.) குற்றியோ மகனோ அங்கே தோன்றுகிற உரு. திணையில் சந்தேகம்வந்தபோது உரு என்கிற பொதுச்சொல் வந்ததுகாண்க.

ஆண்மகனோ பெண்மகளோ அங்கே தோன்றுகிறவர் பாலில் சந்தேகமறாதபோது தோன்றுகிறவர் என்னும் பொதுச்சொல் வரத்தகாமை க.

41. மகிழ்ச்சியினாலும், உயர்வினாலும், சிறப்பினாலும், கோபத்தினாலும், பழிப்பினாலும், திணைபால்களும் வழுவாய் வந்தாலும் குற்றமன்று. இவ்வாறுவருதற்கு வழுவமைதி யென்றுபெயர். வழுவமைதியாவது தப்பாயிருந்தாலும் முன்னோர்களால் ஒத்துக்கொள்ளப்பட்டது.

திணைவழுவமைதி.

(உ-ம்.)

பசுவை என் அம்மை வந்தாள் என்பது மகிழ்ச்சியால் அஃறிணை உயர்திணையாயிற்று.

கிளியாரே சொல்லீர் - உயர்வினால் அஃறிணை உயர்திணையாயிற்று.

என் பிள்ளைகளே எனக்குச் செல்வம் - சிறப்பினால் உயர்திணை அஃறிணை ஆயிற்று.

ஒருவர் செல்லுமிடங்களைத் தாமே அறிந்து சொன்னான் அந்த உயிரால் என்ன பயன் - கோபத்தால் உயர்திணை அஃறிணையாயிற்று.

நாம் கடவுள் உடைமை - பழிப்பினால் உயர்திணை அஃறிணையாயிற்று.

பால்வழுவமைதி.

தன்மகனை என் அம்மை வந்தாள் என்பது மகிழ்ச்சியினால் ஆண்பால் பெண்பால் ஆயிற்று.

ஒருவனைப்பார்த்து அவர்வந்தார் என்பது உயர்வினால் ஒருமைப்பால் பன்மைப்பாலாய் வந்தது.

ஆண்மகனைப்பார்த்து நீ உலகத்துக்குத் தாய் என்பது சிறப்பினால் ஆண்பால் பெண்பாலாய் வந்தது.

ஒருவனைப்பார்த்து நீர் படி பெறுவீர் என்பது கோபத்தினால் ஒருமைப்பால் பன்மைப்பாலாகவந்தது.

பெண்புத்தி கேட்பவனைப்பார்த்து இவன் பெண்ணென்பது பழிப்பினால் ஆண்பால் பெண்பாலாகவந்தது.

42. ஒருமைப்பால் பன்மைப்பாலையும், பன்மைப்பால் ஒருமைப்பாலையும், தழுவிவருவது பால்வழுவமைதியாம்.

(உ-ம்.)

வெயில் எல்லாம் மறைந்தது. இதில் வெயில் என்னும் ஒருமைப்பெயர் எல்லாம் என்னும் பன்மைப்பெயரைத் தழுவி வந்தது.

இரண்டொன்றும் சிவந்தது. இதில் கண் என்னும் பன்மைப்பெயர் சிவந்தது என்னும் ஒருமையினையக்கொண்டது.

43. ஓரிடத்துச்சொல் மற்றோரிடத்துச் சொல்லைத் தழுவிவருவது இடவழுவமைதியாம்.

(உ-ம்.)

இராமன் தாய் எப்படிச்செய்வேன்—இங்கே தாய் என்னும் படர்க்கைப்பெயர் தன்மையிடத்தில்வந்தது.

44. மூன்றுகாலத்திலும் தொழில் இடையில் நீங்காமல் நடக்கின்றபொருளை நிகழ்காலத்தால் சொல்லவேண்டும்.

(உ-ம்.)

தெய்வமிருக்கிறது. ஆறோடுகிறது.
அரசர் ஆளுகிறார். கடலொலிக்கிறது.

45. விரைவினாலும், மிகுதியினாலும், தெளிவினாலும், இயல்பினாலும் ஒருகாலம் மற்றொருகாலமாக மாறிவரும். இது காலவழுவமைதி யெனப்படும்.

(உ-ம்.)

சாப்பிடுகிறவனும் சாப்பிடப்போகிறவனும் தம்மை யழைத்தவருக்குச் சாப்பிட்டேன், சாப்பிட்டேனென்று சொல்லுதல் விரைவினால் நிகழ்காலமும், எதிர்காலமும் இறந்தகாலமாக வந்த காலவழுவமைதி.

நீ அவனுடன் பகைத்தால் செத்தாய், சாகிறாய் - இந்தக் காட்டில் போனால் துணியிழந்தாய் இழக்கிறாய் இவை மிகுதியினால் எதிர்காலம் இறந்தகாலமும், நிகழ்காலமும் ஆயிற்று.

சாதலும், துணியிழத்தலும் தப்பினாலும் தப்பும் ஆகையால் இது மிகுதி.

அறஞ்செய்தால் சுவர்க்கம் புகுந்தான், புகுகிறான். எறும்பு முட்டைகொண்டு திட்டை ஏறினால் மழைபெய்தது, பெய்கிறது இவை தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமும், நிகழ்காலமும் ஆயிற்று.

நான் முன்படிப்பது படிக்கிறது இப்பள்ளிக்கூடம். இதில் இறந்தகாலம்யாதொருகாரணமும் இல்லாமல் இயல்பினால் நிகழ்காலமாகவும் எதிர்காலமாகவும்வந்தது.

46. வினா ஆறுவகைப்படும்

அறிவினா, அறியாவினா, ஐயவினா, கொளல்வினா, கொடைவினா, ஏவல்வினா.

(உ-ம்.)

| | |
|---|---|
| உபாத்தியாயர் இப்பாட்டுக்குப் பொருள் என்ன என்பது | அறிவினா. |
| மாணாக்கன் உபாத்தியாயரை அப்படிக்கேட்டல் | அறியாவினா. |
| கயிறோ பாம்போ என்பது | ஐயவினா. |
| பயறுண்டோ செட்டியாரே என்பது | கொளல்வினா. |
| உனக்குப்புத்தகம் இல்லையோ என்பது | கொடைவினா. |
| இராமா நீ இன்னும் வரவில்லையா என்பது | ஏவல்வினா. |

47. விடை எட்டுவகைப்படும்.

சுட்டுவிடை, மறைவிடை, நேர்விடை, ஏவல்விடை, வினாவிடை, உற்றதுரைத்தல்விடை, உறுவதுகூறல்விடை, இனவிடை. (உற்றதுரைத்தல்=நடந்ததையாவது, நடக்கிறதையாவது சொல்லுதல். உறுவதுகூறல்=இனி நடப்பதைச்சொல்வது. இனவிடை=கேட்டதற்குச் சம்பந்தமான வேறொன்றைச் சொல்லுதல்.)

(உ-ம்.)

| | |
|---|---|
| சென்னைக்கு வழிஎது என்றால் இது என்பது | சுட்டுவிடை |
| இராமா இது செய்வாயா என்றவனுக்குச் செய்யேன்என்பது. | மறைவிடை |
| செய்வேன் என்பது | நேர்விடை |
| நீ செய்என்பது | ஏவல்விடை |
| செய்வேனா என்பது | வினாவிடை |

| | |
|---|---|
| தலைநொந்தது நோகிறதென்பவை | உற்றதுரைத்தல் விடை |
| தலைநோகும் என்பது | உறுவது கூறல் விடை |
| மற்றொன்று செய்வேன் என்பது | இனவிடை |

48. எந்தப்பொருளை எந்தச்சொல்லால் பெரியோர்கள் சொன்னார்களோ அப்படியே நாமுஞ்சொல்வது மரபாம்.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) சிங்கக்குட்டி | அணிற்பிள்ளை | பசுவின்கன்று |
| குதிரைக்குட்டி | கீரிப்பிள்ளை | யானைக்கன்று |
| ஆட்டுக்குட்டி | கிளிப்பிள்ளை | மான்கன்று |

சிங்கக்கன்று, அணிற்குஞ்சு, பசுவின்குட்டி என்பவை குற்றமாம்.

49. செய்யப்படுபொருளைக் கர்த்தாவைப்போல் கூறுதல் வழக்கத்தில் உண்டு.

| | |
|---|---|
| (உ-ம்.) இந்தமாடு நான் வாங்கினது | இந்தமாட்டை நான் வாங்கினேன் |
| இந்தத்துணி நான் கொடுத்தது | இந்தத்துணியை நான் கொடுத்தேன். |

கருவி நிலம் செயல் காலங்களையும் கர்த்தாவைப்போல் வைத்துச்சொல்வதும் உண்டு.

| | |
|---|---|
| இந்த இறகு நான் எழுதினது | நான் இந்த இறகால் எழுதினேன். |
| இந்தவீடு அவன் இருந்தது | இந்தவீட்டிலே அவன் இருந்தான். |
| இந்தத்தொழில் அவன் செய்தது | இந்தத்தொழிலை அவன் செய்தான் |
| இந்தவருஷம் நான் பிறந்தது | இந்தவருஷத்தில் நான் பிறந்தேன். |

புத்தியில்லாதவன் = புத்தி யில்லாதவன் = மூடன.
,, = புத்தியில் லாதவன்=புத்தியிறைல் சூரியனை ஒப்பானவன்.

54. சுட்டுப்பெயர் தான் சுட்டும் பெயருக்குப பின்னே வரும்.

(உ-ம்.) இராமன்வந்தான் அவனுக்குச்சோறுபோடு.
குதிரைவந்தது அதற்குத் தண்ணீர்காட்டு.

விரைவு - சினம - மகுதி - உவகை- அச்சம்- அவலம் எனகிற காரணங்களால சொறகள அடுக்கி வரும். உவகை=சந்தோஷம். அச்சம=பயம. அவலம்= விசனா.

(உ-ம்.) போ போ - விரைவு வருக வருக -உவகை
அடி அடி - சினம் பாமபு பாமபு - அச்சம்
வந்து வந்துபோனான் - மிகுதி. வாழேன் வாழேன்-அவலம்

55. இத்தன்மையென்று அறிந்த பொருளையும, எக்காலத்திலும் இலலாத பொருளையும் ,எவ்விடத்தும் இல்லாத பொருளையும வினையொடு கூட்டிச சொலலும் போது முற்றுமமை வரும்.

(உ-ம்.)

இரண்டுகண்ணும் சிவந்தன } இத்தன்மையென்று அறிந்தபொருள்.
இரண்டுகாதும் கேட்கின்றன }

முயற்கோடு எக்காலத்திலும் இல்லை } எக்காலத்து மில்லாப் பொருள்.
ஆகாயப்பூ எக்காலத்துமில்லை }

ஆமைமயிர்க்கம்பளம் எங்குமில்லை } எவ்விடத்திலும் இல்லாத பொருள்.
மரணத்துக்குத்தப்பினவர் எங்குமில்லை }

# சொற்றொடரியல்.

1. சொற்றொடராவது பெயர்முதலிய சொற்கள் ஒழுங்குபட்டுத் தொடர்ந்துநிற்பது.

2. வாக்கியமாவது எழுவாயும் பயனிலையும் செயப்படுபொருள்முதலியவைகளோடு கூடியாவது, கூடாமலாவது முடிந்துவருவது.

(உ-ம்.) இராமன் வீட்டைக்கட்டினான்
இராமன் வந்தான்

3. எழுவாயாவது வாக்கியத்தின முதற்பொருளேயாம்.

(உ-ம்) பொன்னன்வந்தான்; இதில பொன்னன் என்பது வாக்கியத்தின் முதற்பொருளாகையால் எழுவாய்.

4. பயனிலையாவது எழுவாயின செயலைக்காட்டிக் கொண்டு, அவ்வெழுவாயைக் கொண்டுமுடிவதாம்.

(உ-ம.) இராமன படித்தான் இதில படித்தான் என்னுஞ் சொல் இராமன் என்னும் எழுவாயின் செயலைக்காட்டிக்கொண்டு அவ்வெழுவாயைக்கொண்டு முடிதலால்பயனிலையாம்.

5. செயப்படுபொருளாவது எழுவாயினது தொழிலின்பயனைப்பெற்றுவருஞ் சொல்லாம். இச்செயப்படுபொருளைப் பெற்றுவரும் பெயர்இரண்டாம் வேற்றுமையுருபேற்றேவரும்.

6. வாக்கியத்தில் எழுவாய் மறைந்துவருவதும் உண்டு.

(உ-ம்.) ஊருக்குப்போனேன் இதில்நான் என்னும் எழுவாய் மறைந்திருத்தல் காண்க.

7. பல எழுவாய்கள் சேர்ந்துவந்து ஒரேபயனிலையைக் கொண்டுமுடியும்.

(உ-ம்.) இராமனும், கிருஷ்ணனும், கோவிந்தனும் போனார்கள்.

8. ஒரெழுவாய் பல பயனிலைகளையுங்கொண்டு முடியும். அந்தப்பல பயனிலைகளாகிய வினைகளில் கடைசிவினைமாத்திரம் முற்றுவினையாகவும், மற்றவைகள் எச்சவினைகளாகவும் வரும்.

(உ-ம்.) இராமன் காலையில் எழுந்து, தந்தசுத்தி செய்து, கடவுளை வணங்கி, உண்டு, உடுத்து, பாடசாலைக்குப்போனான். இதில் இராமன் என்னும் எழுவாய்க்கு எழுந்து, செய்து, வணங்கி, உண்டு, உடுத்து என்னும் வினையெச்சங்களும் போனான் என்னும் வினைமுற்றும் பயனிலையாதல் காண்க.

9. ஒரு வாக்கியத்தில் பலசெயப்படுபொருள்கள் வருதலுமுண்டு.

(உ-ம்.) இராமன் வீட்டையும் ஆடுமாடுகளையும் விற்றான்.

10. எழுவாயும் பயனிலையும் திணை, பால், இடங்களில் மாறுபடாமல் ஒத்திருக்கவேண்டும்.

(உ-ம்.) அவன் வந்தான் நான் வந்தேன்
அவள் வந்தாள் நாம் வந்தோம்
அவர் வந்தார் நீ வந்தாய்
அது வந்தது நீர் வந்தீர்
அவை வந்தன

# புணரியல்.

1. புணர்ச்சியாவது நிலைமொழியீறும் வருமொழி முதலும் ஒன்றுகச்சேர்வதாம்.

2. அந்தப்புணர்ச்சி இயல்புப்புணர்ச்சி, விகாரப புணர்ச்சி என இரண்டு வகைப்படும்.

3. இயல்புப் புணர்ச்சியாவது நிலைமொழியும் வருமொழியும் விகாரப்படாமல புணர்வதாம்.

(உ-ம்.)

மண் + வீடு = மண்வீடு. பொன் + மணி = பொன்மணி.
முள் + வேலி = முள்வேலி. வேல் + அழகு = வேலழகு.

4. நிலைமொழியும், வருமொழியும் ஒன்றோடொன்று புணரும்போது தோன்றல், திரிதல், கெடுதல் விகாரங்களைப்பெற்றுவருவது விகாரப்புணர்ச்சியாம்.

5. நிலைமொழிக்கும் வருமொழிக்கும் நடுவில் எழுத்தாவது சாரியையாவது தோன்றுவது தோன்றல் விகாரமாம்.

(உ-ம்.)

| | |
|---|---|
| மா + காய் = மாங்காய்<br>நாய் + கால் = நாய்க்கால் | ங், க், என்னும் எழுத்துகள் தோன்றின. |
| ஆல் + பழம் = ஆலம்பழம்<br>புளி + பழம் = புளியம்பழம் | அம்-சாரியை தோன்றியது |

6. ஓரெழுத்து மற்றோரெழுத்தாகத் திரிந்து வருவது திரிதல் விகாரமாம்.

(உ-ம்) கல் + மலை = கன்மலை<br>
பொன் + தகடு = பொற்றகடு } லகரம் னகரமாகவும், னகரமும் தகரமும் றகரங்களாகவும் திரிந்தன.

7. உள்ள எழுத்துக்கெட்டு நிற்பது கெடுதல் விகாரமாம்.

(உ-ம்.) மரம் + வேர் = மரவேர்<br>
மரம் + நார் = மரநார் } மகரம் கெட்டது.

8. இ, ஈ, ஐ, இம்மூன்றுயிர்களுக்குமுன் வருமொழி முதலில் உயிர்வந்தால் நடுவில் யகரமெய் தோன்றும்.

(உ-ம்.) மணி + அழகு = மணியழகு<br>
பணி + உலர்ந்தது = பணியுலர்ந்தது<br>
படி + உடைந்தது = படியுடைந்தது<br>
தீ + எரிந்தது = தீயெரிந்தது<br>
நீ + ஓடினாய் = நீயோடினாய்<br>
ஈ + இருக்கிறது = ஈயிருக்கிறது<br>
குடை + அழகு = குடையழகு<br>
பனை + ஓலை = பனையோலை<br>
மலை + ஆறு = மலையாறு

9. அ, ஆ, உ, ஊ, ஓ, ஔ, இவ்வாறு உயிர்களுக்கு முன் வருமொழி முதலில் உயிர்வந்தால் நடுவில் வகரமெய் தோன்றும்.

(உ-ம்.) பல + அரசர் = பல வரசர்
நிலா + இருக்கிறது = நிலா விருக்கிறது
மடு + அழகு = மடு வழகு
பூ + அறுத்தான் = பூ வறுத்தான்
அவனோ + இவன் = அவனோ விவன்
கௌ + அழகு = கௌ வழகு

10. பெயர்ச்சொல் ஏகாரத்தின்முன் உயிர்வந்தால் வகரமெய்தோன்றும்.

(உ-ம்.) ஏ + அழகு = ஏ வழகு. ஏ = அம்பு
சே + ஒடிந்தது = சே வொடிந்தது. சே = ரிஷபம்
தே + ஆலயம் = தே வாலயம். தே = தெய்வம்

11. இடைச்சொல் ஏகாரத்துக்கு முன் உயிர்வந்தால் யகர மெய் தோன்றும்.

(உ-ம்.) அவனே + அடித்தான் = அவனே யடித்தான்
நீயே + அழைத்தாய் = நீயே யழைத்தாய்

12. செம்மை என்னும் பண்புப்பெயரின் விகாரமொழியாகிய சே எனபதன்முன் உயிர்வந்தால் யகரமாவது வகரமாவது தோன்றும்.

(உ-ம்.) சே + அடி = சேயடி } சேயடி = சிவந்தபாதம்
சே + அடி = சேவடி } சேவடி ,,

இவ்வாறு தோன்றும் யகர வகர மெய்களுக்கு உடம்படு மெய்யென்று பெயர்.

13. எகரவினா முன்னும் மூன்று சுட்டெழுத்துகளுக்கு முன்னும் உயிரும், யகரமும வந்தால வகரம் தோன்றும். மற்ற வலலினமும, மெல்லினமும், இடையினமும்வந்தால்அந்த அந்தஎழுத்துந்தோன்றும்.

(உ-ம்.) எ + அரசர் = எவ்வரசர்   அ + அரசர் = அவ்வரசர்
எ + யானை = எவ்யானை   அ + யானை = அவ்யானை
எ + காலம் = எக்காலம்   அ + காலம் = அக்காலம்
எ + நாள் = எந்நாள்   அ + நாள் = அந்நாள்
எ + வழி = எவ்வழி   அ + வண்டி = அவ்வண்டி

மற்ற சுட்டெழுத்துகளோடும் இவ்வாறே கூட்டிக்காண்க.

14. குற்றிய லுகரத்துக்குமுன் உயிர்வந்தால் அக்குற்றிய லுகரங்கெட்டு, அது ஏறியிருந்த மெய்யில் வந்த உயிர் ஏறும்.

(உ-ம்.) நாடு + ஆண்டான் = நாடாண்டான்
விளக்கு + ஒடிந்தது = விளக்கொடிந்தது
வரகு + அரைத்தான் = வரகரைத்தான்

15. குற்றிய லுகரம் வடமொழியா யிருந்தால் கெடாது.

(உ-ம்.) சம்பு + ஐ = சம்புவை. விண்டு + ஐ = விண்டுவை

16. முற்றிய லுகரத்துக்கு முன் உயிர்வந்தால் அம்முற்றிய லுகரமுங் கெடும்.

(உ-ம்.) அறிவு + இல்லை = அறிவில்லை
கதவு + உடைத்தான் = கதவுடைத்தான்.

17. வல்லின மெய்யின் மேல்வரும் முற்றியலுகரத்துக்கு முன் உயிர் வந்தால் அந்த முற்றியலுகரம் கெடாமல் வகர உடம்படுமெய் தோன்றும்.

(உ-ம்.)
புகு + என்றான் = புகுவென்றான். அது + ஆயிற்று = அதுவாயிற்று
பசு + ஓடினது = பசுவோடினது. நடு + அறை = நடுவறை

18. டகர, றகர ஈறுகளையுடைய நெடிற்றொடர்க் குற்றிய லுகரத்துக்கு முன்னும், உயிர்த்தொடர்க் குற்றிய லுகரத்துக்கு முன்னும் வேற்றுமையில் நாற்கணமும் வந்தால் அந்த உகரமேறிய மெய் இரட்டும். (நாற்கணம்=உயிர், வல்லினம், மெல்லினம், இடையினம்.)

(உ-ம்.)

| | | |
|---|---|---|
| காடு + இடம் | = காட்டிடம் | ஆறு என்பதனோடும் இடம், கரை, மணல், வழி என்பவைகளைக் கூட்டி இரட்டுதல் காண்க. |
| காடு + குதிரை | = காட்டுக்குதிரை | |
| காடு + மரம் | = காட்டுமரம் | |
| காடு + வாழ்க்கை | = காட்டுவாழ்க்கை | |

| | | |
|---|---|---|
| குறடு + அழகு | = குறட்டழகு | வயிறு என்பதனோடும் இளைச்சல், கடுப்பு, நோய், வலி என்பவைகளைக் கூட்டி இரட்டுதல்காண்க. |
| துறடு + கோல் | = துறட்டுக்கோல் | |
| துறடு + நலம் | = துறட்டுநலம் | |
| குறடு + வழி | = குறட்டுவழி | |

19. டகர, றகரங்களை ஈற்றிலுடைய மேற்சொல்லிய இருதொடரும் இரண்டாம் வேற்றுமைத் தொகையிலும், ஏழாம்வேற்றுமைத் தொகையிலும் இரட்டாவாம்.

(உ-ம்.)

| | | |
|---|---|---|
| நாடு + ஆண்டான் | = நாடாண்டான் | இரண்டாம் வேற்றுமைத்தொகை. |
| குறடு + இடித்தான் | = குறடிடித்தான் | |
| காடு + புகுந்தான் | = காடுபுகுந்தான் | ஏழாம் வேற்றுமைத் தொகை. |
| வயிறு + புகுந்தது | = வயிறுபுகுந்தது | |

20. இந்த டகர, றகர ஈறுகள் ஆறும் வேற்றுமைத் தொகையிலும், விரியிலும் இரட்டும்.
(உ-ம்.) ஆட்டுக்கால்; ஆட்டினதுகால். கயிற்றுச்சுருணை; கயிற்றினதுசுருணை.

21. இக்குற்றியலுகரங்கள் பண்புத்தொகையிலும் இரட்டும்.

(உ-ம்.)

மூடு + பூச்சி = மூட்டுப்பூச்சி. மலடு + எருமை = மலட்டெருமை
வறடு + ஆடு = வறட்டாடு. மலடு + ஆடு = மலட்டாடு.

22. எருது என்னும் உயிர்த்தொடரும் இரட்டும்.
(உ-ம்.) எருது + மாடு = எருத்துமாடு.

23. சிறு, வெறு, குறு, நடு, புது என்னும் முற்றிய லுகரங்களாகிய பண்படிகளின் முன் உயிர்வந்தால் உகரமேறிய மெய் இரட்டும்.
(உ-ம்.) சிறு + அப்பன் = சிற்றப்பன். நடு + ஆறு = நட்டாறு
வெறு + இலை = வெற்றிலை. புது + ஊர் = புத்தூர்
குறு + உயிர் = குற்றுயிர்.

24. பெரு, அரு, கரு என்னும் முற்றியலுகரங்களாகிய பண்படிகளின் முன் உயிர்வந்தால் முதல்நீண்டேவரும்.
(உ-ம்.) பெரு + ஆசை = பேராசை. பெரு + ஊர் = பேரூர்
அரு + உயிர் = ஆருயிர். அரு + அமுது = ஆரமுது
கரு + ஆடு = காராடு. கரு + ஆ = காரா

25. உயிரையும் மெய்யையும் இறுதியாகவுடைய எல்லாச் சொற்களின் முன்னும் வரும் ஞ, ந, ம, ய,

வ என்னும் எழுத்துக்களை முதலிலுடைய சொற்கள் இருவழியிலும் இயல்பாகும். இருவழி=வேற்றுமை, அல்வழி.

(உ-ம்.)

| | |
|---|---|
| பலா + ஞாற்சி = பலாஞாற்சி<br>பனை + நார் = பனைநார்<br>யானை + மருப்பு = யானைமருப்பு<br>சிறுகண் + யானை = சிறுகண்யானை<br>பொன் + வளையல் = பொன்வளையல் | வேற்றுமையிலியல்பு. |
| பல + ஞண்டு = பலஞண்டு<br>பல + நாள் = பலநாள்<br>பல + மாடு = பலமாடு<br>பல + யானை = பலயானை<br>பல + வழி = பலவழி | அல்வழியிலியல்பு. |

காட்டாத ஈற்றுச்சொற்களின் முன்னும் இவ்வாறே ஞ, ந, ம, ய, வ க்களை ஒட்டி யியல்பாதல் காண்க.

26. தனிக்குறிலையடுத்த யகரமெய்யின் முன்னும் தனி ஐகாரத்தின் முன்னும் வரும் ஞ, ந, ம, என்னும் எழுத்துகள் இருவழியிலும் மிகும்.

(உ-ம்.)

| | |
|---|---|
| மெய் + ஞாற்சி = மெய்ஞ்ஞாற்சி<br>மெய் + நீளம் = மெய்ந்நீளம்<br>மெய் + மாட்சி = மெய்ம்மாட்சி<br>கை + ஞாற்சி = கைஞ்ஞாற்சி<br>கை + நீளம் = கைந்நீளம்<br>கை + மலை = கைம்மலை | வேற்றுமை. |

மெய் + ஞான்றது = மெய்ஞ்ஞான்றது
மெய் + நீண்டது = மெய்ந்நீண்டது
மெய் + மாண்டது = மெய்ம்மாண்டது
கை + ஞான்றது = கைஞான்றது
கை + நீண்டது = கைநீண்டது
கை + மாண்டது = கைம்மாண்டது
} அல்வழி.

27. உயிரீறுச் சொற்களின் பின்வரும் க, ச, த, ப பெரும்பாலும் மிகும்.

(உ-ம்.) படிக்க + கொடுத்தான் = படிக்கக்கொடுத்தான்
செய்ய + சொன்னான் = செய்யச்சொன்னான்
எடுத்து + தந்தான் = எடுத்துத்தந்தான்
இந்த + பொருள் = இந்தப்பொருள்

28. பெரும்பாலும் மிகும் என்றவைகள் அடியில் வகுத்துக்காட்டப்படும்.

தனிநெடில் மொழிமுன்னும், குறிலும் நெடிலும் சேர்ந்துவந்த மொழிமுன்னும் இருவழியிலும் வல்லினம் மிகும்.

(உ-ம்.)

பூ + பூத்தது = பூப்பூத்தது. பூ + கொய்தான் = பூக்கொய்தான்
சுறா + பாய்ந்தது = சுறாப்பாய்ந்தது. சுறா + பிடித்தான் = சுறாப்பிடித்தான்

29. சுட்டுத்திரிபின் முன்னும் வினாத்திரிபின் முன்னும் வலிமிகும்.

(உ-ம்.) அந்த + குதிரை = அந்தக்குதிரை. எந்த + தீவு = எந்தத்தீவு
இந்த + சாதி = இந்தச்சாதி. எந்த + பொருள் = எந்தப்பொருள்

30. உயிரையும் மெய்யையும் இறுதியாகவுடைய அஃறிணைப் பெயர்முன் வேற்றுமையில் வலிமிகும்.

(உ-ம்.)

குதிரை + கால் = குதிரைக்கால். நாய் + கால் = நாய்க்கால்
கிளி + சிறகு = கிளிச்சிறகு. தேர் + கால் = தேர்க்கால்

31. பண்புத்தொகை உயர்திணையிலும், அஃறிணையிலும் வலிமிகும்.

(உ-ம்.) நம்பி + கொற்றன் = நம்பிக்கொற்றன்
சாரை + பாம்பு = சாரைப்பாம்பு
கார் + பருவம் = கார்ப்பருவம்
பொய் + பேச்சு = பொய்ப்பேச்சு

32. இகர, யகர, அகர விகுதிகளையுடைய வினையெச்சங்களின் முன் வல்லினம் மிகும்.

(உ-ம்.) ஆடி + கொண்டான் = ஆடிக்கொண்டான்
போய் + சொன்னேன் = போய்ச்சொன்னேன்
போக + பார்த்தேன் = போகப்பார்த்தேன்

33. வன்றொடர்க் குற்றியலுகரத்துக்கு முன் அல்வழியில் வலிமிகும்.

(உ-ம்.) எடுத்து + தந்தான் = எடுத்துத்தந்தான்
பார்த்து + போனான் = பார்த்துப்போனான்

34. வன்றொடர்க்குற்றிய லுகரத்திற்கு முன்னும் மென்றொடர்க்குற்றிய லுகரத்துக்கு முன்னும் வேற்றுமையில் வல்லினம் மிகும்.

(உ-ம்.) கொக்குச்சிறகு. சங்குக்கூட்டம்.
பாக்குக்குலை. இரும்புத்தூண்.

35. இடையே மெய்யெழுத்து மிகுந்துவரும் டகர, றகர ஈறுகளையுடைய நெடிற்றொடர்க்குற்றிய லுகரத்துக்கு முன்னும், உயிர்த்தொடர்க் குற்றியலுகரத்திற்கு முன்னும் வேற்றுமையில் வலிமிகும்.

(உ-ம்.) ஆட்டுக்கால். ஆற்றுக்கால்
முருட்டுத்தொனி. கயிற்றுச்சுருணை
(முருடு=ஓர்வாத்தியம்)

36. மெல்ல, பைய, வலிய என்னும் உடன்பாட்டுக் குறிப்பு வினையெச்சத்துக்கு முன்னும், அன்றி, இன்றி என்னும் எதிர்மறைக்குறிப்பு வினையெச்சத்துக்கு முன்னும் வல்லினம் மிகும்.

(உ-ம்.) மெல்லக்கேட்டான். அன்றிப்போனான்.
பையச்சென்றான். இன்றிக்கண்டான்.
வலியத்தந்தான்.

37. ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்திற்கு முன் வல்லினம் மிகும்.

(உ-ம்.) படியா+பாடம் =படியாப்பாடம்.
இல்லா+பொருள் =இல்லாப்பொருள்.

38. இரண்டாம் வேற்றுமை விரியின் முன்னும் நான்காம் வேற்றுமை விரியின் முன்னும் வலி மிகும்.

(உ-ம்.)

அவனை +கண்டான் =அவனைக்கண்டான்
பழத்தை +பார்த்தான் =பழத்தைப்பார்த்தான்
அவனுக்கு+கொடுத்தான்=அவனுக்குக்கொடுத்தான்
ஊருக்கு +போனான் =ஊருக்குப்போனான்.

39. இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையிலும் ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையிலும் வல்லினம் மிகும்.

(உ-ம்.)

தயிர் + குடம் = தயிர்க்குடம். கை + குட்டை = கைக்குட்டை.
நெய் + பானை = நெய்ப்பானை. கை + பொருள் = கைப்பொருள்

40. மகரம் கெட்டு வரும் உயிரீற்றுமொழிகளின் முன்வரும் வல்லினம் மிகும்.

(உ-ம்.) குளங்கரை. மரந்தண்டு.
குளச்சார்பு. மரப்பெட்டி.

41. படி என்னும் இடைச்சொல் வினைச்சொல்லை அடுத்துவரும்போது வலிமிகாது. சுட்டையும் வினாவையும் அடுத்துவரும்போது மிகுந்தும் மிகாமலும் வரும்.

(உ-ம்)

வரும்படி + சொன்னேன் = வரும்படி சொன்னேன்
அப்படி + செய்தான் = அப்படிச்செய்தான்
,, = அப்படி செய்தான்
எப்படி + செய்தான் = எப்படிச்செய்தான்
,, = எப்படி செய்தான்

42. உலகவழக்கத்திலே உயர்திணையில் இரண்டாம் வேற்றுமை விரிந்தேவரும்.

(உ-ம்.) தகப்பனைக்கண்டான்.

43. குறு, வெறு, நெடு, பெரு, அரு, கரு, என்னும் முற்றியலுகரங்களாகிய பண்படிகளின் முன் வல்லினம் வந்தால இனவெழுத்துத் தோன்றும்.

(உ-ம.)

குறு + கை = குறுங்கை. பெரு + பேச்சு = பெரும்பேச்சு
வெறு + பொய் = வெறும்பொய். கரு + குதிரை = கருங்குதிரை
நெடு + தூண் = நெடுந்தூண அரு + பொருள் = அரும்பொருள்

44. (a) சிலமென்றொடர்க் குற்றிய லுகரம் வன்றொடர்க் குற்றிய லுகரமாதலும் அதனோடு அம்முச்சாரியை பெறுதலும் உண்டு.

(உ-ம்.) இரும்பு + உலக்கை = இருப்புலக்கை.
கரும்பு + சாறு = கருப்பஞ்சாறு.

(b) உயிரீற்றுச் சில மரப்பெயர்முன் வலிவந்தால் இனவெழுத்துத் தோன்றும்.

(உ-ம்.) மா + காய் = மாங்காய். விளா + காய் = விளாங்காய்

(c) ஐகார ாற்றுச் சில மரப்பெயர்க்கு ஐ கெட்டு அம்முச்சாரியை தோன்றும்.

(உ-ம்.) எலுமிச்சை + காய் = எலுமிச்சங்காய்.

மாதுளை, தாழை, நாரத்தை, அதளை, பாவட்டை முதலியவற்றிற்கும் இவ்விதமே.

(d) இகர உகரங்களையும், லகரத்தையும் ஈற்றிலுள்ள சொற்களின் முன்னும் அம்முச்சாரியை தோன்றும்.

(உ-ம்.) புளி + காய் = புளியங்காய்
புன்கு + காய் = புன்கங்காய்
ஆல் + காய் = ஆலங்காய்

உயிரீற்றின் முன்னும் மெய்யீற்றின் முன்னும் வரும் வல்லினம் இயல்பாகுதல் அடியில் வகுத்துக் காட்டப்படும்.

45. உயிரையும் மெய்யையும் இறுதியாகவுடைய உயர்திணைப்பெயர்; பொதுப்பெயர்களின் முன் இருவழியிலும் வலிமிகாது.

| | அல்வழி. | வேற்றுமை. |
|---|---|---|
| (உ-ம்.) | நம்பிசென்றான் | நம்பிகை |
| | அவர்போனார் | அவர்தலை |
| | நீ குறியை | சாத்தகை |
| | தாய்குறியள் | தாய்கை |

46. உயிரையும் மெய்யையும் இறுதியாகவுடைய அஃறிணைப்பெயர்முன் வரும் வல்லினம் எழுவாய்த் தொடரில் இயல்பாம்.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) | பருத்திகுறிது | நாய்கிட்டினது |
| | யானைசிறிது | வேர் சிறிது |
| | ஓதிதீது | தேர் திரும்பியது |
| | குதிரைபோனது | நீர்பாய்ந்தது |

47. வினைவயடுத்த பெயர், விளிப்பெயர் இவ்விரண்டின் முன் வலி யியல்பாம்.

(உ-ம்.) யவனைசொன்னான். சாத்தாகொடு.
அவனேதந்தான். இராமாபோ.

48. உயிரீற்றுச் சுட்டுப்பெயர் முன்னும், வினைப்பெயர் முன்னும் வல்லினம் இருவழியிலும் மிகாது.

(உ-ம்) அது குறிது. அது கொடுத்தான்.
அவை சிறிது. அவை தந்தான்.
எது குறிது. எது கொடுத்தான்.
எவை சிறிது. எவை கொடுத்தான்.

49. உகர ஈற்று விகார எண்ணுப்பெயர் முன் வல்லினம் மிகாது.

(உ-ம்.) ஒருகுதிரை. அறுசுவை
இருசாண். எழுகடல்

ஒன்று, இரண்டு, ஆறு, ஏழு என்னும் எண்ணுப்பெயர்கள் ஒரு, இரு, அறு, எழு என விகாரப்பட்டன.

50. a. சிறு என்னும் பண்படியின் முன் வலி மிகாது.

(உ-ம்.) சிறுகுதிரை. சிறுதுரும்பு.
சிறுசங்கு சிறுபூனை.

b. பல, சில என்னும் சொற்களின் முன் வல்லினம் இயல்பாம்.

(உ-ம்.) பலகுதிரை. சிலகுதிரை
பலசிங்கங்கள். சிலசிங்கங்கள்
பலதினம். சிலதினங்கள்
பலபொருள். சிலபொருள்கள்

51. பலவகை வினைமுற்றின் முன்னும், பெயரெச்சத்தின் முன்னும், வினைத்தொகை முன்னும் வல்லினம் இயல்பாகும்.

(உ-ம்.)

வந்தாய் குமரா } முன்னிலை வினைமுற்றின் முன் இயல்பு
வந்தீர் குமரரே }

| | |
|---|---|
| வந்தார் தகப்பன்மார்<br>வாரது பூனை<br>வந்தன குதிரைகள் | படர்க்கை வினைமுற்றின் முன் இயல்பு. |
| ஓடு குமரா<br>செய் குமரா<br>ஓடா குமரரே<br>வாழ குமரா | ஏவல்வினைமுற்றின்முன்இயல்பு. |
| ஓடுக குமரா | வியங்கோள் முன் இயல்பு. |
| வாராத குதிரை<br>வருகின்ற சாத்தான்<br>வாராத நாரிமார் | பெயரெச்சத்தின் முன் இயல்பு. |
| குளிர்காற்று<br>செய்கலை<br>ஓடு குதிரை | வினைத்தொகைமுன் இயல்பு. |

52. a. நெடிற்றொடர், உயிர்த்தொடர், மென்றொடர், இடைத்தொடர், ஆய்தத்தொடர்க் குற்றியலுகரங்களுக்கு முன் பண்புத்தொகை யொழிந்த அல்வழிப் புணர்ச்சிகளில் வலிமிகாது.

(உ-ம்.) ஆடுகின்றது. இஃது பெரிது.
வந்துபோனேன். செய்து கொடுத்தான்.
வரகு காய்த்தது.

b. ஒற்று இடையில் மிகாத நெடிற்றொடர் உயிர்த்தொடர்களின் முன்னும் இடைத்தொடர் ஆய்தத்தொடர்களின் முன்னும் வேற்றுமையில் வல்லினம் மிகாது.

(உ-ம்)

நாகு கால் } ஒற்று இடையில் மிகாத நெடிற்
வரகு சோறு } றொடரும் உயிர்த்தொடரும் டகர ற
சௌகு தலை } கர மெய்களின்மேல் வராத நெடிற்
எஃகு பெருமை } றொடர் உயிர்த்தொடர் என்றறிக.

53 எனை, அளவு என்னும் பண்புப்பெயர் முன் வலி மிகாது.

(உ-ம்.) அத்தனை பேச்சு அவ்வளவு பேச்சு

54. ஒடு, ஓடு, அது, உடைய என்னும் வேற்றுமையுருபுகளின்முன் வலி மிகாது.

(உ-ம்) அவனொடு சென்றான் அவனோடு போனான்.
அவனது துணி அவனுடையபொருள்.

55. விகாரப்பட்ட என்ன என்னும் வினாச்சொல்லின் முன் வலி மிகாது.

(உ-ம்.) என்னகுலம். என்ன துன்பம்
என்னசாதி. என்னபொருள்

56 உயிரீற்று வடமொழியின்முன் க, ச, த, பக்களை முதலிலுடைய வடமொழி வந்தால் இயல்பாம்.

(உ-ம்.) மணிகண்டன். ஆதிபகவன் கங்கைபுத்திரன்.

57. நேற்று, அன்று, இன்று, என்று என்னும் குற்றியலுகரங்கள் ஐகாரச்சாரியை பெறும்.

(உ-ம்.) நேற்றைக்கு. இன்றைக்கு.
அன்றைக்கு. என்றைக்கு.

58 a. மெய்யெழுத்துக்கு முன் உயிர்வந்தால் அந்த உயிர் மெய்யெழுத்தோடு கூடும்.

(உ-ம்.) வேல் + அழகு = வேலழகு பால் + இது = பாலிது.

b. ஒரு குறிலைச் சேர்ந்த மெய்யின் முன் உயிர் வந்தால் அந்தமெய் இரட்டும்.

(உ-ம்.) கல் + எறிந்தான் = கல்லெறிந்தான்
மண் + அழகு = மண்ணழகு

59. வேற்றுமையில் வருமொழி முதலில் வல்லினம் வந்தால் நிலைமொழி யீற்றிலுள்ள ணகர னகரங்கள் டகர றகரங்களாகத் திரியும். அல்வழியில் இயல்பாம்.

(உ-ம்)

மண் + குடம் = மட்குடம். மண் + குறிது = மண்குறிது
பொன் + பானை = பொற்பானை. பொன் + சிறந்தது = பொன்சிறந்தது

60. வேற்றுமையில் வருமொழி முதலில் வல்லினம் வந்தால் நிலைமொழி யீற்றிலுள்ள லகர ளகரங்கள் றகர டகரங்களாகத் திரியும். அல்வழியில் இயல்பாம்.

(உ-ம்.)

கல் + குடம் = கற்குடம். கல் + குறிது = கல்குறிது
முள் + குறை = முட்குறை. முள் + சிறிது = முள்சிறிது

61. வேற்றுமையிலும் அல்வழியிலும் வருமொழி முதலில் மெல்லெழுத்துவந்தால் நிலைமொழி யீற்றிலுள்ள லகர ளகரங்கள் னகர ணகரங்களாகத் திரியும்.

(உ-ம்.) நூல் + முறை = நூன்முறை
எள் + நெய் = எண்ணெய்
கல் + மறைந்தது = கன்மறைந்தது
முள் + மறைந்தது = முண்மறைந்தது

62. னகர, லகரங்களுக்கு முன் தகர, நகரங்கள் வந்தால் அந்தத் தகர நகரங்கள் றகர னகரங்களாகத் திரியும்.

(உ-ம்.)

| | | |
|---|---|---|
| பொன் + தீது = பொன்றீது | | |
| பொன் + நன்று = பொன்னன்று | | அல்வழி. |
| கல் + தீது = கற்றீது | | |
| கல் + நன்று = கன்னன்று | | |
| பொன் + தட்டு = பொற்றட்டு | | |
| பொன் + நலம் = பொன்னலம் | | வேற்றுமை. |
| கல் + தூண் = கற்றூண் | | |
| வில் + நாண் = வின்னாண் | | |

63. ணகர, ளகரங்களுக்கு முன், தகர நகரங்கள் வந்தால் அந்தத் தகர நகரங்கள் டகர ணகரங்களாகத் திரியும்.

(உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. |
|---|---|
| மண் + தீது = மண்டீது. | மண் + தீமை = மட்டீமை |
| மண் + நன்று = மண்ணன்று. | மண் + நலம் = மண்ணலம் |
| முள் + தீது = முட்டீது. | முள் + தீமை = முட்டீமை |
| முள் + நன்று = முண்ணன்று. | முள் + நலம் = முண்ணலம் |

64. ஒரு குறிலைச் சேராத ணகரமும், னகரமும் வருமொழி முதலில் வந்த தந்நகரமானது ணகரமாகவும் னகரமாகவும் திரியும்போது கெடும்.

(உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| தூண் | + நன்று | = தூணன்று | அல்வழி. |
| பசுமண் | + நன்று | = பசுமணன்று | |
| கோன் | + நல்லன் | = கோனல்லன் | |
| பசும்பொன் | + நன்று | = பசும்பொனன்று | |
| ஊண் | + நலம் | = ஊணலம் | வேற்றுமை. |
| பசுமண் | + நலம் | = பசுமணலம் | |
| மான் | + நலம் | = மானலம் | |
| பசும்பொன் | + நலம் | = பசும்பொனலம் | |

65. அல்வழியில் வருமொழிமுதல் தகரம் றகர டகரங்களாகத் திரியும்போது நிலைமொழி யீற்றுத் தனிக்குறிலைச் சேராத லகர ளகரங்கள் கெடும்.

(உ-ம்.) தோன்றல் + தீயன் = தோன்றறீயன்
வேள் + தீயன் = வேடீயன்

66. வேற்றுமையிலும் அல்வழியிலும் வருமொழி முதல் நகரம் னகரமாகவும், ணகரமாகவும் திரியும்போது நிலைமொழி யீற்றுத் தனிக்குறிலைச்சேராத லகர ளகரங்கள் கெடும்.

(உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| தோன்றல் | + நல்லன் | = தோன்றனல்லன் | அல்வழி |
| வேள் | + நல்லன் | = வேணல்லன் | |
| செங்கோல் | + நன்மை | = செங்கோனன்மை | வேற்று |
| வேள் | + நன்மை | = வேணன்மை | |

67. வருமொழிமுதலில் உயிரும், வல்லினமும், மெல்லினமும், இடையினமும் வந்தால் வேற்றுமையி

னும், அல்வழியிலும், நிலைமொழி யீற்றிலுள்ள மகரம் கெடும்.

(உ-ம்.)

| வேற்றுமை. | அல்வழி. |
| --- | --- |
| மரம் + அடி = மரவடி. | வட்டம் + ஆழி = வட்டவாழி |
| மரம் + பெட்டி = மரப்பெட்டி. | வட்டம் + கடல் = வட்டக்கடல் |
| மரம் + நாற்காலி = மரநாற்காலி. | வட்டம் + நேமி = வட்டநேமி |
| மரம் + வேர் = மரவேர். | வட்டம் + வளை = வட்டவளை |

68. மகரம் அல்வழியில் வல்லினம் வந்தால் கெடாமல் அதற்கு இனவெழுத்தாகத் திரிதலும் உண்டு.

(உ-ம்.) மனம் + குளிர்ந்தது = மனங்குளிர்ந்தது
மரம் + சாய்ந்தது = மரஞ்சாய்ந்தது

69. ஒன்று என்னும் எண் வருமொழியோடு புணரும்போது, ஈற்றுயிர் மெய்கெட்டு, னகரம் ரகரமாய் அதன்மேல் உகரச்சாரியை வரும்.

(உ-ம்) ஒன்று + குதிரை = ஒருகுதிரை. ஒருநாள்.

70. வருமொழி உயிராயின், முதல நீண்டு உகரச் சாரியை கெடும்.

(உ-ம்.) ஒரு + ஆயிரம் = ஓராயிரம். ஓரம்பு.

71. இரண்டு ரகர ஒற்றே நின்று, மற்றைய எழுத்தெல்லாங் கெட உகரச் சாரியை பெறும்.

(உ-ம்.) இரண்டு + குதிரை = இருகுதிரை. இருநாள்.

72. உயிர் வரின் முதல் நீண்டு உகரச் சாரியை கெடும்.

(உ-ம்.) இரண்டு + ஆயிரம் = ஈராயிரம். ஈருயிர்.

73. மூன்று உயிர்வரின் ஈற்றுயிர் மெய்யும், னகரமுங் கெடுதலும், மெய்வரின் முதல் குறுகி ஈறுகெட்டு னகரம் வருகிற மெய்யாகத் திரிதலுமாம்.

(உ-ம்.) மூன்று + ஆயிரம் = மூவாயிரம். முக்கலம், முக்காழி, முவ்வட்டி.

74. நான்கு ஈறுகெட்டு னகரம் லகரமாகவும், றகரமாகவும் திரியும்.

(உ-ம்.) நான்கு + ஆயிரம் = நாலாயிரம்; நாற்பது.

75. ஐந்து ஈறுகெட்டு நகரம் வருகிற மெய்யாதலும், அதற் கினமாதலும், கெடுதலுமாம்.

(உ-ம்.) ஐந்து + மூன்று = ஐம்மூன்று, ஐங்கலம், ஐயாயிரம்.

76. ஆறு குறுகலும் இயல்புமாம்.

(உ-ம்.) ஆறு + பத்து = அறுபது, ஆறுயிரம்.

77. ஏழு உயிர்வரின் ஈற்றுகரங்கெடுதலும், மெய்வரின் முதல் குறுக்கமும் குறுகாமையுமாம்.

(உ-ம்.) ஏழு + ஆயிரம் = ஏழாயிரம், ஏழு + பத்து = எழுபது, ஏழு + பணம் = ஏழுபணம்.

78. எட்டு உயிரும் மெய்யும் முதலாகிய எண்ணுப்பெயர்கள் வந்தால் ஈறுகெட்டு, டகரம் ணகரமாம் மற்றைய மெய்ம் முதற் பெயரும் உயிர்முதற் பெயரும் வந்தால் வழக்கத்தி லியல்பாம்.

(உ-ம்.) எட்டு + ஆயிரம் = எண்ணாயிரம். எட்டு + நூறு = எண்ணூறு. எட்டு + குதிரை = எட்டுக்குதிரை. எட்டு + இலை = எட்டிலை.

79. பத்துமுன் இரண்டு வந்தால் ஈற்றுயிர் மெய் கெட்டுத் தகரவொற்று னகரமாகும்.

(உ-ம்.) பத்து + இரண்டு = பன்னிரண்டு.

80. பத்து முன் ஒன்று, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு இவ் வேழெண்களும், ஆயிரமும் வ ந்தால் உம்மைத் தொகையில் ஈற்றுயிர் மெய்கெட்டு இன்சாரியை தோன்றும்.

(உ-ம்.) பத்து + ஒன்று = பதினொன்று, பதின்மூன்று, ப தினான்கு, பதினைந்து, பதினாறு, பதினேழு, பதினெட்டு, பதி னாயிரம்.

81 பத்துமுன் ஒன்று முதலாகிய எண்களும், ஆ யிரமும் வந்தால் பண்புத்தொகையில் ஈற்றுயிர் மெய் கெட்டு இற்றுச்சாரியை தோன்றும்.

(உ-ம்.) பத்து + ஒன்று = பதிற்றொன்று, பதிற்றுமூன்று. பதிற்று நான்கு, பதிற்றாயிரம்.

82. இரண்டு முதல் எட்டீறாகிய எண்களின் முன் பத்தென்னும் எண் வந்தால், பத்தின் இடையில் நின்ற தகரங்கெடும்.

(உ-ம்.) இரண்டு + பத்து = இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது.

83. இருபதுமுதல எண்பதீறாகிய எண்களின்முன் ஒன்று முதல் ஒன்பதெண்ணும், அதையடுத்த பிறபெ யரும் வந்தால், நிலைமொழியீற்றுக்கு அயலில் தகரவொ ற்றுத் தோன்றும்.

(உ-ம்.) இருபது + இரண்டு = இருபத்திரண்டு, முப்பத்து நானகு, அறுபத்தேழனை, எண்பத்தொன்பதுபாய்.

84. இருபது முதல் எண்பதீறுகிய எண்களின் முனனும், ஒன்பது முன்னும் ஆயிரம் வநதால், இடையில் இன்சாரியை தோனறும்.

(உ-ம்.) இருபது + ஆயிரம் = இருபதினாயிரம், அறுபதினாயிரம், எண்பதினாயிரம், ஒன்பதினாயிரம்.

85. ஒன்பதை ஒழித்து ஒன்றுமுதல் பத்தீறுகிய ஒன்பதெண்களும் இரட்டித்து வந்தால் நிலைமொழியின் முதலெழுத் தல்லாதவைக ளெல்லாங்கெட வருமொழி உயிர்முதன் மொழியாயின் வகரமும், மெய்ம்முதன் மொழியாயின் வந்தமெய்யும் மிகும்.

(உ-ம்.) ஒன்று + ஒன்று = ஒவ்வொன்று, இவ்விரணடு, மும்மூன்று, நந்நான்கு, பப்பத்து.

86. ஒன்பது என்னும் எண்முன் பத்துவந்தால் பதுகெட்டு னகரம் ணகரமாய் முதலிலிருக்கும ஒகரம் தகர ஒற்றிமேலேறி வருமொழியாகிய பத்து நூறுகத்திரியும்.

(உ-ம்.) ஒன்பது + பத்து = தொண்ணூறு.

87. ஒன்பது முன் நூறுவந்தால் பதுகெட்டு, னகரம் ளகரமாய் நிலைமொழி ஒகரம் தகரவொற்றிமேலேறி, வருமொழி ஆயிரமாகத் திரியும்

(உ-ம்.) ஒன்பது + நூறு = தொள்ளாயிரம் இக்காலத்தில் தொளாயிரம் என வழங்குகிறது.

88. உயர்ந்த எண்முன் தாழ்ந்த எண்வந்தால் ஏகாரச்சாரியை வரும்.

(உ-ம்.) ஒன்று + கால் = ஒன்றேகால், இரண்டேமுக்கால், நலனேகுறுணி.

89. ஒன்று முதலாகிய எண்களின்முன் அரை என்னும் எண்வந்தால் சாரியைபெறுது.

(உ-ம்.) இரண்டு + அரை = இரண்டரை, ஏழரை.

90. வடக்கு என்பது மேற்குக் கிழக்குப்பெயர்களோடும், பிறபெயரோடும், புணரும்போது நிலைமொழியீற் றுயிர்மெய்யும் ககரவொற்றுங் கெடும்.

(உ-ம்.) வடக்கு + மேற்கு = வடமேற்கு, வடகிழக்கு, வடமலை, வடகாடு.

91. தெற்கு மேற்குக் கிழக்குகளோடும், பிறபெயரோடும் புணர்ந்தால் நிலைமொழியீற் றுயிர்மெய் கெட்டு றகரம் னகரமாகும்.

(உ-ம்.) தெற்கு + மேற்கு = தென்மேற்கு, தென்கிழக்கு, தென்னாடு, தென்மொழி.

92. மேற்கு பிறபெயர்களோடு புணரும்போது நிலைமொழியீறு கெட்டு றகரம் லகரமாதலும் இயல்பு மாம்.

(உ-ம்.) மேற்கு + புறம் = மேல்புறம், மேல்கடல், மேலூர்.
மேற்கு + ஊர் = மேற்கூர்.

93. கிழக்கு, ஈற்றுயிர் மெய்யுங் ககரவொற்றுங் கெட்டுமுதல் நீளும்.

(உ-ம்.) கிழக்கு + கடல் = கீழ்கடல், கீழ்பால், கீழூர்.

வடமொழிப்புணர்ச்சி.

94. தமிழில் வந்து வழங்கும் வடமொழிச்சந்திகள் மூன்றுவகைப்படும்.

95. அவை:—தீர்க்கசந்தி, குணசந்தி, விருத்திசந்தி.

96. தீர்க்கசந்தியாவது வடமொழிகளாகிய நிலைமொழி வருமொழிகளின் ஈற்றிலும் முதலிலும் உள்ள உயிரெழுத்துகள் கெட்டு இடையில் ஆ, ஈ, ஊ க்களில் ஒன்று தோன்றுவதாம்.

அ, ஆ வின்முன் அ, ஆ வந்தால் இரண்டுங்கெட்டு ஆ-தோன்றும்.

(உ-ம்.) குண + அகுணம் = குணாகுணம்
மகர + ஆலயம் = மகராலயம்
கங்கா + அமிர்தம் = கங்காமிர்தம்
சதா + ஆனந்தம் = சதானந்தம்

இ, ஈ யின்முன் இ, ஈ வந்தால் இரண்டுங்கெட்டு ஈ-தோன்றும்.

(உ-ம்.) கரி + இந்திரன் = கரீந்திரன் (யானைக்கரசன்)
கிரி + ஈசன் = கிரீசன் (மலைக்கரசன்)
மகி + இந்திரன் = மகீந்திரன் (பூமிக்கரசன்)
கௌரீ + ஈசன் = கௌரீசன் (பார்வதிநாயகன்)

உ, ஊ வின்முன் உ, ஊ வந்தால் இரண்டுங்கெட்டு ஊ-தோன்றும். (உ-ம்.)

குரு + உபதேசம் = குரூபதேசம்
குரு + ஊகை = குரூகை (குருவின்கோரிக்கை)
வதூ + உபதேசம் = வதூபதேசம் (பெண்ணின்உபதேசம்)
வதூ + ஊகை = வதூகை. (பெண்ணின்கோரிக்கை)

97. குணசந்தியாவது நிலைமொழியீற்று உயிரும், வருமொழிமுதல் உயிருங்கெட்டு இடையில் ஏ, ஓ க்களில் ஒன்றுதோன்றுவதாம்.

அ, ஆ வின்பின் இ, ஈ வந்தால் இரண்டுங்கெட்டு ஏ-தோன்றும்.

(உ-ம்.) நர + இந்திரன் = நரேந்திரன்
நர + ஈசுவரன் = நரேசுவரன்
நரா + இந்திரன் = நரேந்திரன் (பூமிக்கரசன்)
உமா + ஈசன் = உமேசன் (பார்வதிநாயகன்)

அ, ஆ வின்முன் உ, ஊ வந்தால் இரண்டுங்கெட்டு ஓ-தோன்றும்.

(உ-ம்.) சுத்த + உதகம் = சுத்தோதகம்
ஞான + ஊர்ச்சிதன் = ஞானோர்ச்சிதன்
தயா + உற்பத்தி = தயோற்பத்தி
தயா + ஊர்ச்சிதன் = தயோர்ச்சிதன்

98. விருத்தி சந்தியாவது நிலைமொழி வருமொழிகளின் ஈற்றிலும் முதலிலுமுள்ள உயிரெழுத்துகள் கெட்டு, இடையில் ஐ, ஔ க்களில் ஒன்று தோன்றுவதாம்.

அ, ஆ வின்முன் ஏ, ஐ வந்தால் இரண்டுங்கெட்டு ஐ-தோன்றும்.

(உ-ம்.) குண + ஏகன் = குணைகன் (குணங்களில்முக்கியன்)
குண + ஐசுவரியம் = குணைசுவரியம்
தரா + ஏகவீரன் = தரைகவீரன்
மகா + ஐசுவரியம் = மகைசுவரியம்

அ, ஆ வின்முன் ஓ, ஔ வந்தால் இரண்டுங் கெட்டு, ஔ-தோன்றும்.

(உ-ம்.) வன + ஓடதி = வனௌடதி (வனமூலிகை)
வன + ஔடதம் = வனௌடதம்
மகா + ஓடதி = மகௌடதி
தேவ நா + ஔடதம் = தேவநௌடதம்

99. விஷ்ணுவைத் தொழுவோனை வைஷ்ணவன் என்றும, சிவனைத்தொழுவோனைச் சைவன் என்றும், சனகன் புத்திரியைச் சானகி என்றும், திருபதன்புத்திரியைத் திரௌபதை என்றும், தசரதன்புத்திரனைத் தாசரதி என்றும், பகவான் சரித்திரத்தைப் பாகவதம் என்றும் வழங்கும் இவைபோன்றமொழிகளை வடநூலார் தத்திதாந்தம் என்று சொல்வார்.

100. ஆகார ஈற்றுவடமொழிப்பெயர் தமிழில் பெரும்பாலும் ஐகாரமாகத் திரியும்.

(உ-ம்.) சீதா = சீதை. தயா = தயை
மாலா = மாலை. கலா = கலை.

## பதவியல்.

1. எழுத்துகள் தனித்தாவது இரண்டுமுதலியவாகத் தொடர்ந்தாவது பொருளைத் தெரிவித்தால் பதமாம்.

(உ-ம்.) ஆ, கா; பொன், பொன்னன்.

2. பகுபகாப்பதம் பகுபதமென இரண்டு வகைப்படும்.

3. பகாப்பதமாவது சொல்லைப் பிரித்தலால் பகுதி, விகுதி முதலாகிய பயனில்லாமல் ஒருபொருளைக் காட்டும் சொல்லாம்.

4. அது நான்கு வகைப்படும். அவை:—பெயர்ப்பகாப்பதம், வினைப்பகாப்பதம், இடைப்பகாப்பதம், உரிப்பகாப்பதம்.

(உ-ம்.) பெயர். மண்—பொன். இடை. மற்று—கொல்.
வினை. வா—போ. உரி. தவ—நனி.

5. பகுபதமாவது சொல்லைப் பிரிக்கும்போது பகுதிக்கும் விகுதிக்கும் வேறுபொருள் உண்டாகி ஒருபொருளைத் தெரிவிக்கும் பதமாம்.

6. பகுபத வுறுப்புகள் ஆறு. அவை:—பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம்.

7. பகுதி, விகுதி, இடைநிலைகள் இப்படிப்பட்டவையென்று முன்னே வினையியலிற்சொல்லப்பட்டன.

8. சாரியையாவது பகுதியுடன் விகுதியும், இடைநிலைகளும் புணரும்போது, அவைகளைச் சார்ந்து வரும் இன், அன், அ, கு முதலியவைகளேயாம்.

விகுதியும், பதமும், வேற்றுமை யுருபுகளும் புணரும்போது வரும் பொதுச்சாரியைகள்.

அன், இன், ஆம், அல், அற்று, இற்று, அத்து, அம், ஏ, அ, உ, ஐ, கு, ன்.

9. இச்சாரியைகளில் சில தனிமொழிகளிலும் வருவதுண்டு.

(உ-ம்.) சோன், மான், மன்றம், மலேயம்.

10. சந்தியாவது விகுதியும், இடைநிலேயும், சாரியைகளும் பகுதியோடு புணரும்போது உண்டாகும் தோன்றல், திரிதல், கெடுதல்களே யாம்.

11. விகாரமாவது வலித்தல் முதலிய வேறுபாடுகளே யாம்.

12. அவ்விகாரம் ஒன்பதுவகைப்படும். அவை:- வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல், விரித்தல், தொகுத்தல், முதற்குறை, இடைக்குறை, கடைக்குறை.

13. (1) வலித்தலாவது மெல்லினமெய் வல்லினமெய்யாக வருவது.

(2) மெலித்தலாவது வல்லினமெய் மெல்லினமெய்யாகவருவது.

(3) நீட்டலாவது குறில்நெடிலாக வருவது.

(4) குறுக்கலாவதுநெடில்குறிலாகவருவது.

(5) விரித்தலாவது இல்லாத இடத்தில் புணர்ச்சியினல் அல்லாமல் எழுத்துத் தோன்றுவது.

(6) தொகுத்தலாவது புணர்ச்சியினல் அல்லாமல் உள்ள எழுத்து மறைந்து வருவது.

(7) முதற்குறையாவது சொற்களின் முதலெழுத்துக்குறைந்து வருவது.

(8) இடைக்குறையாவது இடையில் உள்ள எழுத்துக்குறைந்து வருவது.

(9) கடைக்குறையாவது கடையிலுள்ள எழுத்துக்குறைந்து வருவது.

14. பகுபதவுறுப்புகளில் ஒன்றாகிய விகாரத்தில் இடைக்குறை யொழிந்தமற்ற எட்டுவகை விகாரங்களும் வரும். வலித்தல் முதலிய இவ்விகாரங்களுக்கு உதாரணம் அடியிற்காட்டும் பகுபதமுடிபிற் காண்க.

15. வலித்தல் முதலிய இவ்விகாரங்கள் அடி, தொடை முதலியவற்றைப் பற்றிச் செய்யுளில்வந்தால் செய்யுள் விகாரமெனப்படும்.

## பகுபதமுடிபு.

1. காண்டல்—காண்-பகுதி, தல்-தொழிற்பெயர் விகுதி, ணகரம் டகரமானது சந்தி.

2. அகறல்—அகல்-பகுதி, தல்-தொழிற்பெயர் விகுதி. லகரம் கெட்டதும் தகரம் றகரமாகத் திரிந்ததும் சந்தி.

3 ஒற்கம்—ஒல்கு-பகுதி, அம்-தொழிற்பெயர் விகுதி, லகரம் றகரமானது சந்தி, உ-கெட்டது சந்தி.

4 விளக்கம்—விளங்கு-பகுதி, அம்-தொழிற்பெயர் விகுதி, ஙகரம் ககரமானது வலித்தல் விகாரம், உ-கெட்டது சந்தி.

5. வெற்றி—வெல்-பகுதி, இ-தொழிற்பெயர் விகுதி, லகரமும் தகரமும் றகரமானது சந்தி.

6. வென்றி—வெல்-பகுதி, றி-தொழிற்பெயர் விகுதி, லகரமும் நகரமும் றகரமானது சந்தி, இவ்வாறு முடிந் வெற்றி என்பதின் பகுதி றகரம் னகரமானது மெலித்தல்.

7. நட்பு—நள்-பகுதி, பு-தொழிற்பெயர்விகுதி, ளகரம் டகரமானது சந்தி.

8. நடை—நட-பகுதி, ஐ-தொழிற்பெயர்விகுதி, பகுதியின் ஈற்று அ-கெட்டது விகாரம்.

9. நல்குரவு—நல்கூர் பகுதி, வு-தொழிற்பெயர் விகுதி, அ-சாரியை, பகுதியின் ஊகாரம் உகரமானது குறுக்கல் விகாரம்.

10. முயலாமை—முயல்-பகுதி, மை-தொழிற்பெயர் விகுதி, ஆ-எதிர்மறைவிகுதி.

11. பயிற்சி—பயில்-பகுதி, சி-தொழிற்பெயர் விகுதி, லகரம் றகரமானது சந்தி.

12. சூழ்ச்சி—சூழ்-பகுதி, சி-தொழிற்பெயர் விகுதி, ச்-சந்தி.

13. கேண்மை—கேள்-பகுதி, மை-பண்புப்பெயர் விகுதி, ளகரம் ணகரமானது சந்தி.

14. நலம்—நல்-பகுதி, அம்-பண்புப்பெயர் விகுதி.

15. தொல்லை—தொல்-பகுதி, ஐ-பண்புப்பெயர் விகுதி, லகரம் இரட்டியது சந்தி.

16. **விற்றேன்**—வில் - பகுதி, என் - தன்மை யொருமை வினைமுற்று விகுதி, ற் - இ - இடைநிலை, லகரம் றகரமானது சந்தி.

17. **ஈகிறேன்**—ஈ - பகுதி, என் - தன்மை யொருமை வினைமுற்று விகுதி, கிறு - நி - இடைநிலை, உகரக்கேடு சந்தி.

18. **தருவேன்**—தா - பகுதி, என் - தன்மை யொருமை வினைமுற்று விகுதி, வ் - எதிர்கால இடைநிலை, ரு - விரித்தல் விகாரம், பகுதியின் ஆகாரம் அகரமானது குறுக்கல்.

19. **வைதோம்**—வை - பகுதி, ஓம் - தன்மைப் பன்மை விகுதி, த் - இ - இடைநிலை.

20. **வைக்கின்றோம்**—வை - பகுதி, ஓம் - தன்மைப்பன்மை விகுதி, கின்று - நி - இடைநிலை, க் - தோன்றியதும், உ - கெட்டதும் சந்தி.

21. **பொருவோம்**—பொரு - பகுதி, ஓம் - தன்மைப் பன்மை விகுதி, வ் - எ - இடைநிலை.

22. **காமுற்றாய்**—காமுறு - பகுதி, ஆய் - முன்னிலை யொருமைவிகுதி, பகுதியின் ஒற்று இரட்டியதும் உகரம் கெட்டதும் சந்தி, இரட்டிய றகரமெய்யே இறந்தகாலங் காட்டியது.

23. **ஈர்க்கின்றனை**— ஈர் - பகுதி, ஐ - முன்னிலை யொருமைவிகுதி, கின்று - நி - இடைநிலை, அன் - சாரியை, க் - தோன்றியதும், உ - கெட்டதும் சந்தி.

24. **நோற்பீர்**—நோல் - பகுதி, ஈர்-முன்னிலைப்பன்மை விகுதி, ப் - எ - இடைநிலை, லகரம் றகரமானது சந்தி.

25. **சான்றோன்**—சால் - பகுதி, ஆன் - ஆண்பால் விகுதி, ற் - இ-இடைநிலை, லகரம் னகரமானது சந்தி, விகுதியின் ஆகாரம் ஓகாரமானது செய்யுள்வழக்கு.

26. **கழறினன்**—கழறு-பகுதி, அன்-ஆண்பால்விகுதி, இன்-இ - இடைநிலை, உ - கெட்டது சந்தி.

27. **பூண்டாள்**—பூண் - பகுதி, ஆள் - பெண்பால் விகுதி, ட் - இ-இடைநிலை.

28. **ஏற்றனர்**—ஏல்-பகுதி, அர் - பலர்பால் விகுதி, ற்-இ - இடைநிலை, அன்-சாரியை, லகரம் றகரமானது சந்தி.

29. **கொணர்ந்தார்**—கொணரு-பகுதி, ஆர்-பலர்பால் விகுதி, த்-இ- இடைநிலை, த் - சந்தி, சந்தித்தகரம் நகரமானது மெலித்தல்விகாரம், ரு-விரித்தல்விகாரம், உகரக்கேடுசந்தி, பகுதியின் ஆகாரம் அகரமானது குறுக்கல் விகாரம்.

30. **பயந்தது**—பய-பகுதி, து-ஒன்றன்பால் விகுதி, த்-இ - இடைநிலை, அ-சாரியை, த் - சந்தி, சந்தித்தகரம் நகரமானது மெலித்தல் விகாரம்.

31. **போன்றது**—போல்-பகுதி, (இடை) து-ஒன்றன்பால் விகுதி; ற்-இ - இடைநிலை, அ-சாரியை, லகரம் னகரமானது சந்தி.

32. **கூவிற்று**—கூ-பகுதி, று - ஒன்றன்பால் விகுதி, இன் - இ- இடைநிலை, னகரம் றகரமானதும் வகரம் தோன்றியதும் சந்தி.

33. மென்றன—மெல் - பகுதி, அ - பலவின்பால் விகுதி, ற்-இ - இடைநிலை, அன்-சாரியை, லகரம் னகரமானது சந்தி.

34. மிக்கன—மிகு - பகுதி, அ - பலவின்பால் விகுதி, அன்-சாரியை, பகுதியின்மெய் இரட்டியது சந்தி, அதுவே இறந்தகாலங் காட்டியது, உ - கெட்டது சந்தி.

35. காப்பன—கா-பகுதி, அ -பலவின்பால் விகுதி, ப்-ப - இடைநிலை, அன்-சாரியை, ப் - சந்தி.

36. கழன்றன—கழல்-பகுதி, அ-பலவின்பால் விகுதி, ற்-இ - இடைநிலை, அன்-சாரியை, லகரம் னகரமானது சந்தி.

37. சொன்மின்—சொல் -பகுதி, மின் ஏவற்பன்மை விகுதி, லகரம் னகரமானது சந்தி.

38. வருக—வா-பகுதி, க-வியங்கோள் விகுதி, ரு-விரித்தல் விகாரம், பகுதியின் ஆகாரம் அகரமானது குறுக்கல்.

39. தரியேன்—தரி-பகுதி, ஏன்-தன்மையொருமை விகுதி, ய்-சந்தி, எதிர்மறை விகுதி தொகுத்தல்.

40. திறம்போம்—திறம்பு-பகுதி, ஓம்- தன்மைப் பன்மை விகுதி, உ - கெட்டதுசந்தி, எதிர்மறை விகுதி தொகுத்தல்.

41. பற்றற்க—பற்று-பகுதி, க-வியங்கோள் விகுதி, அல்-எதிர்மறைவிகுதி, உ-கெட்டதும் லகரம் றகரமாகத்திரிந்ததும சந்தி.

42. சுறவேல் — சுற-பகுதி, எல்-எதிர்மறை ஏவலொருமைவிகுதி, வ் - சந்தி.

43. கருதன்மின் — கருது-பகுதி, மின் - ஏவற்பன்மைவிகுதி, அல்- எதிர்மறைவிகுதி, உ-கெட்டதும் லகரம் னகரமாகத் திரிந்ததும் சந்தி.

44. செத்த — சா - பகுதி, அ - பெயரெச்சவிகுதி, த்-இ-இடைநிலை, த்-சந்தி, பகுதியின் ஆகாரம் எகரமானது குறுக்கல்.

45. ஈன்ற — ஈன் - பகுதி, அ - பெயரெச்சவிகுதி, ற்-இ- இடைநிலை.

46. நட்ட = (புதைத்த) நடு -பகுதி, அ - பெயரெச்சவிகுதி, உ - கெட்டது சந்தி, பகுதி ஒற்று இரட்டியது சந்தி, அதுவே இறந்தகாலங் காட்டியது.

47. நட்ட = (சிநேகித்த) நள்-பகுதி, அ - பெயரெச்சவிகுதி, ட்-இ-இடைநிலை, ளகரம் டகரமானது சந்தி.

48. (a.) ஓடின — ஓடு - பகுதி, அ-பெயரெச்ச விகுதி, இன்-இ-இடைநிலை, உ - கெட்டது சந்தி.

(b.) ஓடிய — ஓடு-பகுதி, அ-பெயரெச்சவிகுதி, இன்-இறந்தகால இடைநிலை, இடைநிலையின் னகர மெய்கெட்டது கடைக்குறை, உகரங்கெட்டதும் யகரம் தோன்றியதும் சந்தி.

(c.) பாடின — பாடிய; தேடின- தேடிய; ஆடின- ஆடிய; மூடின- மூடிய; எழுதின- எழுதிய; பேசின -பேசிய முதலியவற்றிற்கும் இவ்வாறேகொள்க.

49. (a.) ஆயின—ஆ-பகுதி, அ-பெயரெச்சவிகுதி, ய்-இ-இடைநிலை, இன்-சாரியை.

(b.) ஆன—ஆ-பகுதி, அ-பெயரெச்சவிகுதி, இன்-இ-இடைநிலை, இடைநிலையின் இகரங்கெட்டது முதற்குறை.

(c.) போன—சொன்ன என்பவைகளிலும் இன்-இடைநிலை முதற்குறையாய் வருதல்காண்க.

50. ஆய—ஆ- பகுதி, அ- பெயரெச்சவிகுதி, ய்-இ-இடைநிலை.

51. ஆகிய—ஆ-பகுதி, அ- பெயரெச்சவிகுதி, கு-சாரியை, உ-கெட்டதுசந்தி, இன்-இ- இடைநிலை, இடைநிலையின் னகரமெய்கெட்டது சிதைக்குறை, ய்- சந்தி.

52. உற்ற—உறு-பகுதி, அ - பெயரெச்சவிகுதி, பகுதி ஒற்று இரட்டியது சந்தி, அதுவே இறந்தகாலங்காட்டியது, உகரக்கேடு சந்தி.

53. வெகுள்கிற—வெகுள்- பகுதி, அ- பெயரெச்சவிகுதி, கிறு- கி -இடைநிலை, உ-கெட்டது சந்தி.

54. சிதைக்கும்—சிதை- பகுதி, உம் - பெயரெச்சவிகுதி, கு- சாரியை, உ- கெட்டதும் க்-தோன்றியதும் சந்தி. வினைமுற்றாயின் உம் வினைமுற்று விகுதி யென்க.

55. புரண்டு—புரள் -பகுதி, உ-வினையெச்சவிகுதி, ட் -இ- இடைநிலை, ளகரம் ணகரமானது சந்தி.

56. உள்ளி—உள்- பகுதி, இ- வினையெச்சவிகுதி, இவ்விகுதியே இறந்தகாலங் காட்டியது, ள்- சந்தி.

57. **பார்த்து**—பார் - பகுதி, உ- வினையெச்சவிகுதி, த்- இ- இடைநிலை, த்- சந்தி.

58. **பாத்து**—(பங்கிட்டு) பா- பகுதி, (இது பகு என் பதின் மரூஉ) உ- வினையெச்சவிகுதி, த்- இ- இடைநிலை, த்- சந்தி.

59. **வேட்டு**—வேள்- பகுதி, ளகரம் டகரமானது சந்தி, ட்- இ- இடைநிலை, உ- வினையெச்சவிகுதி.

60. **தின்ன**—தின்- பகுதி, அ- நிகழ்கால வினையெச்சவிகுதி, ன்- சந்தி.

61. **படிக்க**—படி- பகுதி, அ- நிகழ்கால வினையெச்சவிகுதி, கு- சாரியை, உகரக்கேடும் க்- தோன்றியதும் சந்தி.

62. **படிக்க**—(வியங்கோளானால்) படி- பகுதி, க- வியங்கோள்விகுதி, க்- சந்தி.

மடிக்க, இருக்க, பறக்க, இழுக்க, நகைக்க, திறக்க என்றாற்போன்றவைகளிலும் வினையெச்சமானால் அ- விகுதி யென்றும், வியங்கோளானால் க- விகுதியென்றும் கொள்க.

63. **அழைப்ப**—(வினையெச்சம்) அழை- பகுதி, அ- நிகழ்காலவினையெச்சவிகுதி, ப்- சந்தி, ப்- விரித்தல் விகாரம்.

64. **அழைப்ப**—(பலர்பால் வினைமுற்று) அழை- பகுதி, ப- எதிர்காலப் பலர்பால் விகுதி, ப்- சந்தி.

65. **அழைப்ப**—(பலவின்பால்வினைமுற்று) அழை- பகுதி, அ- பலவின்பால் விகுதி, ப்- எதிர்கால இடைநிலை, ப்- சந்தி.

அடைப்ப, தழைப்ப, எடுப்ப, தொடுப்ப, தேய்ப்ப என்றாற்போன்றவைகளையும் இவ்வாறே வினையெச்சமாகவும், பலர்பால், பலவின்பால் வினைமுற்றுகளாகவும் கொண்டு பிரித்துக்காண்க.

66. **எனின்**—என்- பகுதி (இடைச்சொல்), இன்-எதிர்கால வினையெச்சவிகுதி.

67. **செய்தால்**—செய்- பகுதி, ஆல் - எதிர்காலவினையெச்சவிகுதி, த்-எழுத்துப்பேறு, அல்லது விரித்தல்விகாரம்.

உழுதால், பெய்தால், நெய்தால் என்றாற்போன்ற வினையெச்சங்களிலும் தகரம் எழுத்துப்பேறென்க.

68. **கான்றால்**—(கக்கினால்) கால் - பகுதி, ஆல்-எதிர்கால வினையெச்சவிகுதி, து- சாரியை, உ- கெட்டதும், தகரம் றகரமானதும், லகரம் னகரமானதும் சந்தி.

சென்றால், கொன்றால், பயின்றால் என்றாற் போன்றவைகளிலுள்ள றகரமும் துச்சாரியையின் விகாரமென்று உணர்க.

69. **ஆய்ந்தக்கால்**—(ஆராய்ந்தால்) ஆய்- பகுதி, கால்-எதிர்கால வினையெச்சவிகுதி, த்- சந்தி, சந்தித்தகரம் நகரமானது மெலித்தல், து, அ- சாரியைகள், உகரம் கெட்டதும் ககரம் தோன்றியதும் சந்தி.

விழுந்தக்கால், புகுந்தக்கால், நுழைந்தக்கால், இழிந்தக்கால் என்றாற்போன்றவைகளிலும் காண்க.

70. **இறங்கினக்கால்**—இறங்கு- பகுதி, கால்-எதிர்கால வினையெச்சவிகுதி, இன்-அ - சாரியைகள், உ-கெட்டதும், ககரம் தோன்றியதும் சந்தி.

**71. மாண்டால்**—(செத்தால்) மாள்- பகுதி, ஆல்- எதிர்கால வினையெச்சவிகுதி, து-சாரியை, தகரம் டகரமானதும், உகரங்கெட்டதும், ளகரம் ணகரமானதும் சந்தி.

**72. மாண்டால்**—(மாட்சிமைப் பட்டால்) மாண்- பகுதி, ஆல்-எதிர்கால வினையெச்சவிகுதி, து-சாரியை, தகரம் டகரமானதும் உகரம் கெட்டதும் சந்தி.

**73. தோற்காத**—தோல்- பகுதி, அ-பெயரெச்சவிகுதி, கு-சாரியை, ஆ- எதிர்மறைவிகுதி, த்- எழுத்துப்பேறு, லகரம் றகரமானதும், சாரியையின் உகரங்கெட்டதும்சந்தி.

**74. சிக்காமல்**—சி-பகுதி, மல்-வினையெச்சவிகுதி, கு-சாரியை, ஆ-எதிர்மறைவிகுதி, உ- கெட்டதும், க்-தோன்றியதும் சந்தி.

**75. உருட்டாது**—(வினைமுற்று) உருள்- பகுதி, டு- பிறவினைவிகுதி, ளகரம் டகரமானதும், உகரம் கெட்டதும்சந்தி, ஆ-எதிர்மறைவிகுதி, து - ஒன்றன்பால் வினைமுற்றுவிகுதி. வினையெச்சமாயின் து-வினையெச்சவிகுதி என்க.

**76. புலவன்**—புலம்- பகுதி, அன் - ஆண்பால்விகுதி, மகரம் கெட்டதும் வகரந்தோன்றியதும் சந்தி. புலவு-பகுதி என்னலுமாம்.

**77. மனைவி**—மனை- பகுதி, இ- பெண்பால் விகுதி, வ்-எழுத்துப்பேறு.

**78. சலவர்**—சலம் - பகுதி, அர்- பலர்பால்விகுதி, ம் -கெட்டதும், வ்- தோன்றியதும் சந்தி.

79. விழுமியது—விழுமம்- பகுதி, து-ஒன்றன்பாற் விகுதி, அம்- கெட்டது கடைக்குறை, இ, அ-சாரியைகள், ய- சந்தி.

80. சான்றவன்—சால்- பகுதி, லகரம் னகரமானது சந்தி, ற்- இ-இடைநிலை, அ- சாரியை, வ்-சந்தி, அன்- ஆண்பால்விகுதி.

81. மூத்தவள்—மூ-பகுதி, த்-சந்தி, த்-இ-இடைநிலை, அ-சாரியை, வ்- சந்தி, அள்- பெண்பால் விகுதி.

82. மருண்டவர்—மருள்-பகுதி, ளகரம் ணகரமானது சந்தி, ட்- இ-இடைநிலை, அ-சாரியை, வ்- சந்தி, அர்- பலர்பால் விகுதி.

83. பூத்தவை—பூ- பகுதி, த்- சந்தி, த்- இ-இடைநிலை, அ- சாரியை, வை- பலவின்பாற்பெயர்விகுதி.

84. சிறந்தது—சிற- பகுதி, த்-சந்தி, சந்தித்தகரம் நகரமானது மெலித்தல் விகாரம், த்-இ- இடைநிலை, அ- சாரியை, து-ஒன்றன்பால்விகுதி.

85. சிறியவன்—சிறுமை- பகுதி, மை- கெட்டதும், உகரம் இகரமானதும், ய்-தோன்றியதும் சந்தி, அ-சாரியை, வ்- சந்தி, அன்-ஆண்பால்விகுதி.

86. பிறன்—பிற-பகுதி (இடைச்சொல்), அன்-ஆண்பால் விகுதி, பகுதியின் அகரம் கெட்டது கடைக்குறை, அல்லது ன்-ஆண்பால்விகுதி எனினும் ஆம்.

87. **பிறிது**—பிற-பகுதி (இடைச்சொல்), து- ஒன்றன்பால் விகுதி, பகுதியின் அகரம் கெட்டது [illegible] இ- சாரியை.

88. **கொடியவர்**—கொடுமை- பகுதி, மை- கெட்டது, உகரம் இகரமானதும் சந்தி, ய்- வ்- உடம்படுமெய் ஆகிய சந்திகள், அ- சாரியை, அர்- பலர்பால்விகுதி.

89. **கொழுநன்**—கொழு - பகுதி, ந்- பெயரிடைநிலை, அன்- ஆண்பால விகுதி.

90. **யாத்தவை**—யா- பகுதி, த்- இ-இடைநிலை, த்- சந்தி, அ-சாரியை, வை- பலவின்பாற பெயர் விகுதி.

91. **தமர்**—தாம் - பகுதி, அர் - பலர்பாறபெயர் விகுதி, பகுதியின் ஆகாரம் அகரமானது குறுக்கல் விகாரம்.

92. **ஒவாதவை**—ஓ-பகுதி, வ்-சந்தி, ஆ-எதிர்மறை விகுதி, த்-எழுத்துப்பேறு, அ-சாரியை, வை-பலவின்பாற பெயர்விகுதி.

93. **மற்றையோன்**—மற்று-பகுதி (இடைச்சொல்), ஐ- சாரியை, உ- கெட்டது சந்தி, ய்-சந்தி, ஆன் -ஆண்பால்விகுதி, ஆ- ஓ ஆனது செய்யுள்வழக்கு.

94. **கூராதவன்**—கூர்-பகுதி, ஆ-எதிர்மறைவிகுதி, த்-எழுத்துப்பேறு, அ-சாரியை. வ-சந்தி, அன் - ஆண்பால் விகுதி.

95. **தோழி**—தோழமை- பகுதி, அகரமும் - மையும் கெட்டதுசந்தி, இ- பெண்பால் விகுதி.

96. **கயவா**—கயமை-பகுதி, ம்-கெட்டதும, உ-தோன்றியது சந்தி, ஆ-பலர்பால விகுதி.

97. **மலரவன்**—மலர்-பகுதி, அ-சாரியை, வ-சந்தி, அன்-ஆண்பால் விகுதி

98. **மயலிகள்**—மயல்-பகுதி, இ-ஆண்பால் பெண்பால்களுக்குப் பொதுவானவிகுதி, கள்-அஃறிணைகளின் பன்மை விகுதி.

99. **திண்ணியான்** -திண்மை-பகுதி, மை - கெட்டதும், ண-தோன்றியதும் சந்தி இ-சாரியை, ய-சந்தி, ஆன்-ஆண்பால் விகுதி

100. **கிளைஞர்**—கிளை-பகுதி, ஞ்-பெயரிடைநிலை, அர்-பலர்பால விகுதி

## பொருட்புணர்ச்சி கூறும் முறை.

1. "அம்மா-முளைக்கு மெயிறு முதிர்சுவை நாவிற்கு விளக்கும் வலியனதாமென்று."

அம்மா + முளைக்கும—அல புணர்ச்சி, இடைச்சொற்றொடர் நிலைத்தொடர்.

முளைக்கும + எயிறு—அல்-புணர்ச்சி, தெரிநிலைப் பெயரெச்சத்தொகாநிலைத்தொடர்.

எயிறு + முதிர்—அல்- புணர்ச்சி, எழுவாய்த்தொகாநிலைத்தொடர்

முதிர் + சுவை—அல்-புணர்ச்சி, வினைத்தொகை நிலைத்தொடர்.

சுவை + நாவிற்கு—வேற்- புணர்ச்சி, இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

நாவிற்கு + விளைக்கும்—வேற்- புணர்ச்சி, நான்காம்வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்.

விளைக்கும் + வலியன—அல் - புணர்ச்சி, தெரிநிலை வினைமுற்றுத் தொகாநிலைத்தொடர்.

வலியன + தாம்—வேற் - புணர்ச்சி, இரண்டாம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்.

தாம் + மென்று—அல்- புணர்ச்சி, எழுவாய்த் தொகாநிலைத்தொடர்.

2. "செங்கட்புலியே றறப்பசித்துந்தின்னுவாம்"

செம் + கண்—அல் - புணர்ச்சி, பண்புத்தொகை நிலைத்தொடர்.

கண் + புலி—வேற் - புணர்ச்சி, இரண்டாம் வேற்றுமை யுருபும்பயனு முடன்றொக்க தொகைநிலைத்தொடர்.

புலி + ஏறு—அல்-புணர்ச்சி, இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். அல்லது வேற்—புணர்ச்சி, ஏழாம் வேற்றுமைத்தொகைநிலைத்தொடர்.

ஏறு + அற—அல் - புணர்ச்சி, எழுவாய்த்தொகா நிலைத்தொடர்.

அற + பசித்தும்—அல் - புணர்ச்சி, தெரிநிலை வினையெச்சத்தொகா நிலைத்தொடர்.

பசித்தும் + தின்னு—அல் - புணர்ச்சி, தெரிநிலை வினையெச்சத்தொகாநிலைத்தொடர்.

உம் + தின்று—அல் - புணர்ச்சி, இடைச்சொற் றொடர்நிலைத்தொடர்.

இன்று + ஆம்—அல்- புணர்ச்சி, எதிர்மறை வினைமுற்றுத்தொகாநிலைத்தொடர்.

3. “வரவர வாய்மடுத்து”

வர + வர—அல் - புணர்ச்சி, அடுக்குத்தொகாநிலைத்தொடர்.

வரவர + வாய்—அல்- புணர்ச்சி, தெரிநிலை வினையெச்சத் தொகாநிலைத்தொடர்.

வாய் + மடுத்து—வேற-புணர்ச்சி, மூன்றும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

4. “அனல் கொளுந்தும் வெங்காரம் வெய்தெனினும் நோய் தீர்க்கும்.”

அனல் + கொளுந்தும்—அல்- புணர்ச்சி, உவமைத்தொகை நிலைத்தொடர்.

கொளுந்தும் + வெங்காரம்—அல் - புணர்ச்சி, தெரிநிலைப் பெயரெச்சத் தொகா நிலைத்தொடர்.

வெங்காரம் + வெய்து—அல- புணர்ச்சி, எழுவாய்த் தொகாநிலைத்தொடர்.

வெய்து + எனினும்—அல்- புணர்ச்சி, குறிப்பு வினைமுற்றுத் தொகாநிலைத்தொடர்.

எனினும் + நோய்—அல் - புணர்ச்சி, தெரிநிலை வினையெச்சத்தொகாநிலைத்தொடர்.

உம + நோய்—அல்-புணர்ச்சி, இடைச்சொற்றொகாநிலைத்தொடர்.

நோய் + தீர்க்கும்—வேற்-புணர்ச்சி, இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

5 "மாபறவை-புல்லுரு வஞ்சுவபோல்"

மா + பறவை—அல்- புணர்ச்சி, உம்மைத்தொகைநிலைத்தொடர்.

பறவை + புல்—அல்- புணர்ச்சி, எழுவாய்த்தொகாநிலைத்தொடர்.

புல் + உரு—வேற்- புணர்ச்சி, மூன்றாம் வேற்றுமையுருபும் பயனுமுடன்றொக்க தொகைநிலைத்தொடர்.

உரு + அஞ்சுவ—வேற்-புணர்ச்சி, நான்காம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

அஞ்சுவ + போல்—அல்- புணர்ச்சி, தெரிநிலைவினைமுற்றுத்தொகாநிலைத்தொடர்.

6. "நேரிழாய்-மெய்சென்று தாக்கும் வியன்கோலடி தன்மேல், கைசென்று தாங்குங்கடிது."

நேரிழாய் + மெய்—அல்- புணர்ச்சி, விளித்தொகாநிலைத் தொடர்.

மெய் + சென்று—வேற்- புணர்ச்சி, ஏழாம்வேற்றுமைத்தொகைநிலைத்தொடர்.

சென்று + தாக்கும்—அல் - புணர்ச்சி, தெரிநிலைவினையெச்சத் தொகாநிலைத்தொடர்.

தாக்கும்+வியன்—அல் - புணர்ச்சி, தெரிநிலைப் பெயரெச்சத் தொகாநிலைத்தொடர்.

வியன்+கோல்—அல்- புணர்ச்சி, பண்புத்தொகைநிலைத்தொடர்.

கோல்+அடி—வேற் - புணர்ச்சி, ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

அடி+தன்மேல்—வேற்- புணர்ச்சி, இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

தன்மேல்+கை—வேற் - புணர்ச்சி, ஏழாம்வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்.

கை+சென்று—அல்-புணர்ச்சி, எழுவாய்த் தொகாநிலைத்தொடர்.

சென்று+தாங்கும்—அல்- புணர்ச்சி, தெரிநிலைவினையெச்சத் தொகாநிலைத்தொடர்.

தாங்கும்+கடிது—அல்- புணர்ச்சி, தெரிநிலை வினைமுற்றுத் தொகாநிலைத்தொடர்.

## சொல் இலக்கணங்கூறும்முறை.

1. "கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறாஉங் குற்றந் தமதே பிறிதன்று."

கற்றன—அஃறிணை, பலவின்பால், படர்க்கை, இறந்தகால வினையாலணையும்பெயர், இரண்டாம் வேற்றுமைத்தொகை, மாட்டியென்னும் வினையெச்சத்தைக்கொண்டு முடிகிறது.

கல்லார்—உயர்திணை, பலர்பால், படர்க்கை, எதிர்மறை வினையாலணையும்பெயர், ஆறாம்வேற்றுமைத்தொகை, செவியென்னும் பெயர்ச்சொல்லைக்கொண்டு முடிகிறது.

செவி—பால்பகா அஃறிணைப்பெயர், ஏழாம்வேற்றுமைத்தொகை, மாட்டியென்னும் வினையெச்சத்தைக்கொண்டு முடிகிறது.

மாட்டி—உடன்பாட்டுத் தெரிநிலை, இறந்தகாலவினையெச்சம் கையுறாஉம் என்னும் பெயரெச்சத்தைக் கொண்டு முடிகிறது.

கையுறாஉம்—உடன்பாட்டுத் தெரிநிலை, எதிர்காலப்பெயரெச்சம், குற்றம் என்னும் சருவிப்பெயர் கொண்டது.

குற்றம்—பால்பகா அஃறிணைப்பெயர், எழுவாய் வேற்றுமை, தமது என்னும் குறிப்புவினைக்கு எழுவாயாக நிற்கிறது.

தமது—தாம் என்னும் பொருளடியாகப் பிறந்த அஃறிணை, ஒன்றன்பால், படர்க்கை, குறிப்புவினைமுற்று, குற்றம் என்னும் எழுவாய் வேற்றுமையைக்கொண்டு முடிகிறது.

ஏ—தேறறப்பொருள் தரும் இடைச்சொல், தமது என்னும் குறிப்பு வினைமுற்றை அடுத்துவந்தது.

பிறிது—பிற என்னும் இடைச்சொலடி யாகப்பிறந்த அஃறிணை, ஒன்றன்பால், படர்க்கைப் பெயர்ச்-

சொல் எழுவாய்வேற்றுமை, அன்று என்னும் வினைமுற்றைக்கொண்டுமுடிகிறது.

அன்று—அன்மை என்னும் பண்படியாகப் பிறந்த அஃறிணை, ஒன்றன்பால், படர்க்கை, எதிர்மறைக் குறிப்புவினைமுற்று, பிறிதுஎன்னும் எழுவாய்க்குப் பயனிலையாய்நிற்கிறது.

உ: "சிற்றுளியால்-கல்லுந் தகருந் தகரா களங் கூறாய் கொல்லுலைக் கூடத்தினால்."

சிறு—பண்புப்பெயர், உளிஎன்னும் பெயரை விசேடித்துவந்தது.

உளியால்—பால்பகா அஃறிணைப்பெயர், மூன்றாம்வேற்றுமை விரி, தகரும் என்னும் வினைமுற்றைக்கொண்டு முடிகிறது.

கல்—பால்பகாஅஃறிணைப்பெயர், முதல்வேற்றுமை, தகரும்என்னும் வினைமுற்றைக் கொண்டது.

உம்—உயர்வு சிறப்புப்பொருள்தரும் இடைச்சொல், கல் என்னும் பெயரை அடுத்து வந்தது.

தகரும்—அஃறிணை, பலவின்பால், படர்க்கை, எதிர்காலச் செய்யுமென்வாய்ப்பாட்டுவினைமுற்று, கல் என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது.

தகரா—அஃறிணை, பலவின்பால், படர்க்கை, எதிர்மறை வினைமுற்று, கல் என்னும் எழுவாய்வேற்றுமையைக் கொண்டுமுடிந்தது.

கனங்குழாய்—பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக்காரணப்பெயர், உயர்திணை, பெண்பால், படர்க்கை, விளிவேற்றுமை.

சொல்—உயர்திணை, ஆண்பால், படர்க்கை, ஆறாம்வேற்றுமைத்தொகை, உலை என்னும் பெயர்ச்சொல்லைக்கொண்டு முடிந்தது.

உலை—பால்பகா அஃறிணைப்பெயர், ஏழாம் வேற்றுமை உருபும்பயனும் உடன்றொக்கதொகை, கூடத்திறல் என்னும் பெயரைக்கொண்டு முடிந்தது.

கூடத்திறல்—பால்பகா அஃறிணைப்பெயர், மூன்றாம் வேற்றுமைவிரி, தகரா என்னும் வினைமுற்றைக் கொண்டது.

## பரிக்ஷைக்குரிய வினாக்கள்.

## இலக்கணம்.

### 1 எழுத்தியல்.

1. சார்பெழுத்துகளெவை?
2. அ-இ-உ என்னும் சுட்டெழுத்துகள் எவ்வாறு திரியும்?
3. புறச்சுட்டுக்கு மூன்றுதாரண மெழுதுக.
4. வினாவெழுத்துகளில் திரிந்துவருவது எது?
5. அடியில்வரும் சொற்களில் வினாவெழுத்துகளையுடைய சொற்களெவை?

எருது-எவன்-யானை-யார்-எணி-எது-இராமனா-நிலா.

6. இவைகளுக்கு இனவெழுத்துகளெவை?

எ-ஐ-ஔ-ச-த-வ.

7. மொழிக்கு இடையிலேயேவரும் எழுத்து எது?

8. குற்றியலுகரம் என்றால் அர்த்தம் என்ன?

9. பின்வருஞ் சொற்களில் குற்றியலுகரங்களையும், முற்றியலுகரங்களையும் எடுத்தெழுதி, அவற்றுள் குற்றியலுகரங்களுக்குத் தொடர் கூறுக.

கழுகு-நிலவு-திருட்டு-சங்கு-இது-இஃது-செய்து-பாக்கு-விடு-வீடு-வழு-அளவு-நிற்காது-நினைவு-முழவு-வரம்பு.

10. வல்லின மெய்யின்மேல்வரும் குற்றியலுகரத்துக்குக் காரணமெழுதுக.

11. குற்றியலுகரத்துக்கும் முற்றியலுகரத்துக்கும் மாத்திரை என்ன?

12. மொழிக்குமுதலில் வாராதமெய்யெழுத்துகளெவை?

13. வகரமெய் எந்தெந்த உயிர்களோடுகூடி மொழிக்கு முதலில் வாராது?

14. எல்லாவுயிர்களோடுங்கூடி மொழிக்கு முதலில்வாராத மெய்யெழுத்துகளெவை?

15. மொழிக்குஇறுதியில்வாராதமெய்யெழுத்துகளெவை?

16. பின்வரும் மொழிகளுக்குப்போலிஅமைத்தெழுதுக.
வயிரம்-சவுரியம்-நீந்து-குடம்-மடம்-வண்டு.

17. பட்டணம்-கட்டடம்-குழாம்-ஏலம் என்னும் அஃறிணைப்பெயர்களின் ஈற்றிலுள்ள மகரத்துக்கு னகரம் போலியாக வருமா? காரணத்துடன் கூறுக.

18. த்-ஏ-இ-ப என்னும் எழுத்துகளுக்குச் சாரியை கூட்டியெழுதுக.

19. சாரியைபெறாத எழுத்துகளெவை?

20. ஈ-டட-த என்பவைகளுக்கு அகரத்தைச் சாரியையாகக் கொள்ளின் என்ன எழுத்துகள்? சாரியையாகக் கொள்ளாவிடின் என்ன எழுத்துகள்?

## பெயரியல்.

21. இவைகளில் இயற்சொல்லுக்குத் திரிசொல்லும், திரிசொல்லுக்கு இயற்சொல்லும் எழுதுக.

கா-பயிர்-நுணல்-ஞாலம்-பொருவார் - தூங்கார்-கப்பல்-இல் (ஏழாம் வேற்றுமையுருபு) யமன்-பொருமை.

22. இத்திரிசொற்களுக்கு இயற்சொல் கூறுக. அன்னை பொழில், ஆ-பகர்-இயம்-வரை-கான்.

23. வடசொல்லுக்குத் தமிழ்ச்சொல்லும், தமிழ்ச்சொல்லுக்கு வடசொல்லும் கூறுக.

கங்கை-நிலா-மரம்-பர்வதம்-நதி-நடை-பாம்பு-நாரை.

24. தகுதிவழக்கு என்பது என்ன?

25. இலக்கணப்போலி, மரூஉ, இடக்கரடக்கல், குழூஉக்குறிகளுக்குத் தனித்தனி, இவ்விரண்டு உதாரணம் வாக்கியத்தில் அமைத்தெழுதுக.

26. குறிப்பாகப் பொருள் விளக்கும் வழக்குச் சொற்களெவை?

27. அடியில் வருபவைகளில் இடுகுறிப்பெயர்களெவை? காரணப்பெயர்களெவை! ஏதுவுடன் எழுதுக.

மறையவன்-சலவர்-மரக்கலம்-பிணம்-கிளைஞர் - எயிறு-ஏதிலார்-இல்லாள்-வேளாளர்-கலிமா-உறுப்பு.

28. இருதிணைக்கும் பொதுவான படர்க்கைப்பெயர் நான்கெழுதுக.

29. ஆண்பாலுக்குப் பெண்பாலும், பெண்பாலுக்கு ஆண்பாலும் எழுதுக.

அரசன்-பாலியன்-இளைஞன்-மூத்தாள்-குமரன்-நாயகன்-வலைஞன்-பார்ப்பான்-கருமான்-சிறுவன்-சீமான்.

30. ஒன்றன்பாலுக்கும், பலவின்பாலுக்கும் பொதுவாய் வரும் பெயருக்கு என்ன என்றுபெயர்?

31. பால்பகா அஃறிணைப்பெயர் ஒருமையாக வருவதற்கு மூன்றுதாரணமும், பன்மையாய் வருவதற்கு இரண்டுதாரணமும் வாக்கியத்தில் அமைத்தெழுதுக.

32. ஒருமையாகவேவரும் பெயர்களுக்கும், பன்மையாகவேவரும் பெயர்களுக்கும் இவ்விரண்டுதாரணங்காட்டு.

33. மூவிடத்துக்கும் பொதுவான பெயர் எது? அது மூவிடத்துக்கும் பொதுவாய் வருவது எப்படி?

34. பெயர்ச்சொற்கள் எத்தனை வகைப்படும்?

35. பொருட்பெயருக்கும், சினைப்பெயருக்கும் மும்மூன்றுதாரணமெழுதுக.

36. மை-ஐ-பு-கு-அம்-து என்பவைகளில் ஒவ்வொன்றும் பண்புப்பெயர் விகுதியாகவும், தொழிற்பெயர் விகுதியாகவும் வரும்படி ஒவ்வொருதாரணம் வாக்கியத்தில் அமைத்தெழுதுக.

37. விகுதிபெறாமல் வரும் பண்புப்பெயருக்கும், ஆண்பால், பெண்பால் பெயர்களுக்கும் இவ்விரண்டுதாரணமெழுதுக.

38. முதல் வேற்றுமையின் சொல்லுருபுகளெவை?

39. இல் உருபு எப்பொழுது ஐந்தனுருபாகவும், எப்பொழுது ஏழனுருபாகவும் கொள்ளப்படும்?

40. பின் வருபவைகளிலுள்ள செயப்படுபொருள்கள் என்னபொருளில் வந்தன?

குளந்தொட்டான், பயவாக்கையிகந்து வாழ்தல், நெடுநீர்ப்புணையின்றி நீந்துதல், வண்டிமலர்ச் சேக்கைவிரும்பும், பெற்றேன்மற் றீண்டு துறக்கந்திறப்பதோர்தாள், பிறர்க்குதவிசெய்யாக் கருங்கடல், கடலே அனையம், தருமத்தை வேர்பறித்து.

41. அடியில் மறைந்தும் வெளிப்பட்டும் வரும் மூன்றனுருபுகளுக்குப் பொருள் என்ன?

பொன்மலர்-தண்ணென்கதிர் வரவாற்பொங்குங் கடல்-உய்யுமா லாருங் கிளையோடயின்று-தீவினைக்கம்பியருல் வாய்ப்பூட்டிடப்படின்-சிற்றுளியால் கல்லுந்தகரும்.

42. அடியிலுள்ளநான்கனுருபுகளுக்குப்பொருளென்ன?

சிலம்பிக்குத்தன் சினை கூற்றம் - முனிக்கரசு-தக்கார்க்கேயீவர்-நெல்லுக்கிறைப்பதுநீர்-சிற்றுயிர்க்குற்றதுணை.

43. இத்தொடர்களிலுள்ள ஐந்தனுருபுகளுக்குப் பொருள் கூறுக.

பூத்தலிற் பூவாமைநன்று-பூவிற் பொலிகுழலாய்-கண்ணிற்சொலிச் செவியினோக்கும்-நெல்லின் நீங்கிய உமி-நீங்கக்காப்பத்திமையிற் பாங்கினியதில்.

44. அடியில் மறைந்தும் வெளிப்பட்டும் வரும் ஆறனுருபுகளுக்குப் பொருள் கூறுக.

கடல்நீர்-தண்ணென்கதிர்வரவால் - குரங்கின்கூட்டம்-கடலின்பெருமைகடவார்-ஆலம்வீழ்-மணிகளதுகுவியல்-பொன்னினதுபொடி - பசுவினுடையகன்று - இராமனுடையநாள்-அரசனதுதோட்டம்.

45. அடியில்வரும் ஏழாம்வேற்றுமை யுருபுகளில் பொருளாதி ஆறனுள் இன்னது இன்னகிழமைப் பொருளுக்கு இடமாயிற்று என்று எழுதுக.

பாலில்சுவை-வருடத்தில் மாதம் அடங்கியது- அர்தவீட்டில் உள்ள அறை-விரலில் உள்ளது நகம்-நற்குணங்களிற் சிறந்தது வாய்மை- ஆட்டத்தி லபிநயம்.

46. பொருளாதி ஆறும் பிறிதின்கிழமைக்கு இடமாய் வரும்படி ஒவ்வோருதாரண மெழுதுக.

47. எட்டாம வேற்றுமைக்கு உருபும் பொருளுமென்ன? உதாரணத்துடன் கூறுக.

48. விளி ஏலாதபெயர்களெவை?

49. எழுவாய் ஒன்றனையே ஏற்குமபெயர்களெவை?

50. நீ-யான்-தான-அவன்-இது எனபவைகளுக்குப் பன்மையில் நான்காம்வேற்றுமை என்ன?

51. பெயர்ச்சொல்லைக் கொண்டுமுடியும் வேற்றுமை யுருபுகளெவை?

52. எந்த வேற்றுமைகள் சாரியைபெறும்?

53. வேற்றுமை யுருபுகள் இன்-அன-அ-அற்று என்னும் சாரியைகளைப் பெற்றுவரும்படி உதாரணங்காட்டுக.

54. மகரவீற்றுப் பெயர்கள் வேற்றுமை உருபேற்கும் போது எவ்வாறாம்? உதாரணமென்ன?

55. கொண்டு-ஆக-நின்று-இருந்து-என்னும் சொல்லுருபுகள் என்ன சாரியைகளைப் பெறும்?

56. எந்தப்பெயர்உருப்புக்குப்பின் உம்மென்னும்இடைச்சொல்லைப் பெற்றுவரும்?

57. எட்டுவேற்றுமை யுருபும் வரும்படி ஓர்வாக்கியம் எழுதுக.

## வினையியல்.

58. தெரிநிலைவினையென்பது எப்படிப்பட்டது? அது எத்தனை வகைப்படும்.

59. தெரிநிலை வினைமுற்றில் எவைகளை அறியவேண்டும்?

60. செயப்படு பொருள் குன்றிய வினைக்கு மூன்றுதாரணமெழுதுக.

61. செயப்படுபொருளைக்குன்றிய வினையை என்னசெய்தால் செயப்படுபொருள் குன்றாவினையாகும்? உதாரணமென்ன?

62. இடைநிலையேயன்றி மற்றெந்த உறுப்புகளுங் காலங்காட்டும்?

63. பகுதியால் காலங்காட்டுதற் குதாரண மெழுதுக.

64. எந்தெந்த வினைச்சொற்களில் விகுதிகாலங்காட்டும்?

65. எதிர்காலங்காட்டும் பலர்பால் விகுதி எது?

66. செய்யுமென் வினைமுற்று எந்தப்பாலுக்கு வராது?

67. பெயரெச்சங்கள் எவ்வகைப் பெயர்களைக்கொண்டு முடியும்?

68. அடியில் வருபவைகளில் பெயரெச்சத்திற்கு வினையெச்சமும் வினையெச்சத்திற்குப் பெயரெச்சமும் காலம் வேறுபடாமல் எழுதுக.

தரும்-கூவி-நல்கூர்ந்து-வைத்த-விட்ட-வைக்க-காமுற்றால்-வாழும்-தின்கிற-சென்றால்-வேக-அகல்கின்ற.

69. தொழிற்பெயர் எத்தனை வகைப்படும்? வகைக்கிவ்விரண்டுதாரணமெழுதுக.

70. பிறவினை விகுதிகளெவை?

71. பகுதி விகாரப்பட்டு வரும் பிறவினைக்கு மூன்றுதாரணங்கூறுக.

72 தன்வினைக்கும் பிறவினைக்கும் பொதுவான விகுதி யொன்று எழுதுக.

73. செயவினை எத்தனைவகைப்படும்?

74. உடன்பாட்டிற்கு எதிர்மறையும், எதிர்மறைக்கு உடன்பாடும் எழுதுக.

உண்டேன்-பெற்றேன் - பாடாட-கொண்ட - வருகின்றன சுண்ணா-விரைகிறேன்-பாரேல்-சொன்மின்.

75. குறிப்புவினைமுற்று என்பதென்னை?

76. இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாகிய தெரிநிலைவினைமுற்றையும் குறிப்புவினைமுற்றையும் எழுதுக.

77. எப்பொழுது வினைமுற்று வினையெச்சமாகும்? உதாரணமென்ன?

78. பல-பாடி-செய்-கட்டி-இம்மொழிகளைப் பெயர்ச்சொல்லாகவும், வினைச்சொல்லாகவும் வைத்து ஒவ்வோர் வாக்கிய மெழுதுக.

79. சுடு-உண்-இல்-கெடு என்பவைகளுக்கு முதனிலை திரிந்த தொழிற்பெயர் கூறுக.

80 உண்டு-செய்ய என்பவைகளைத் தெரிநிலை வினையாகவும் குறிப்புவினையாகவும் வைத்துத் தனித்தனி வாக்கியமெழுதுக.

81. இருதிணைக்கும் பொதுவினைகள் எவை?

82. இப்பண்புப் பெயர்களினின்று பிறக்கும் குறிப்புப் பெயரெச்சங்களெவை?

வெம்மை-கருமை-அருமை-எளிமை-திண்மை-பழமை.

83. வியங்கோள்-ஏவலொருமை - ஏவற்பன்மை - எதிர்மறை ஒருமையேவல் இவைகளுக்குரிய விகுதிகளெவை?

81. வியங்கோளுக்கும், ஏவலுக்கும் பேதமென்ன?

85. முன்னிலை வினைமுற்றிற்கும் ஏவல்வினைமுற்றிற்கும் வேறுபாடென்ன?

86. அடியில் வருபவைகள் ஒவ்வொன்றிற்கு மோருதாரணம் வாக்கியத்தில் அமைத்தெழுதுக.
தொழிற்பெயர்-தொழிலடியாகப் பிறந்தபெயர், வினைமுற்று-வினையாலணையும்பெயர், பண்புப்பெயர் - பண்படியாகப்பிறந்தபெயர், செயவினை - செயப்பாட்டுவினை.

87. அடியில் வருபவைகளிலுள்ள தெரிநிலைவினைமுற்று, குறிப்புவினைமுற்று, பெயர்ப்பகுபதங்களை எடுத்துக்காட்டுக.

பலசற்றேறும் யாம்-சிலகற்றோர்களன்றும் உள-பொன்மலா நாற்றமுடைத்து-முற்று முணர்ந்தவரில்லை-இறைமாட்சி புண்ணியத்தின்பாலது-காங்கைவெளிது-மாசின் மனத்தினவர்கல்ல வாக்காண்ப-பாண்டவாமாசில் மனத்தினவர்-ஆங்குலர்தவாகளில் அவன்பெரியவன் - பெரியவன்வந்தான - அவன்மிகுந்த செல்வன்- அந்தச்செல்வன் என்வீட்டிற்கு வந்தான்- அவன் பெருவயிறன்-பெருவயிறன் விரைவாய் நடவான்.

88. பின்வரும் வாக்கியங்களிலுள்ள செய்யுமென்னும் வாய்பாட்டுவினைகளில் பெயரெச்சங்களெவை? வினைமுற்றுகளெவை?

அந்தக்குதிரை விரைவாய் ஓடும் - விரைவாய் ஓடும் குதிரையை வண்டியில் பூட்டு-பூங்கை நாவிற்குதவும் நயந்து-முழங்கும்பனிக்கட்டியும் உணைப்படும்-திங்கள் இருளைநீக்கும்-தெரியும் விழியிலார்க்கேது விளக்கு - தேமாவருந்தும் சுழல் கால்வர-முளைக்குமெயிறு முதிர்சுவை நாவிற்கு விளைக்கும் வலியனதாமென்று - நான்படிக்கும் புஸ்தகம் இது - இந்தப் புஸ்தகத்தை யவன் படிக்கும்-அவன் இருக்கும் வீடிது-அவனிடத்தில் அந்தப்புஸ்தகமிருக்குமென்று நினைக்கிறேன்.

89 அடியில் வருபவைகளிலுள்ள பெயரெச்ச வினையெச்சங்களுக்குக் காலமும், காலங்காட்டும் உறுப்புங் கூறுக.

பழியெடுத்தோதி - கல்லறக்கேட்பினும் - பாம்புண்டநீர் - கருதிய இட்டிகையுங்கோயும் - உடுப்பவுந்துண்பவுன்றே - வீரமொழிசாற்றினைகுவார் - புல்லுக்கிறைப்பரோபோய் - சென்றநாள் - ஊர்நின்றபாகன் - ஊருமெறும்பு - படைதொட்டகாலன்.

90. கீறிட்டமொழிகள் இன்னின்னவகைச்சொற்களென வேதெளிவாய்க் கூறுக.

சொனாளரக்கலம் — மாகலந்தவேந்தன் — செய்யாதவாறு - செவிகொளாகன்விழியா நெட்டுயிர்ப்போ முறாபிணம் ஆங்குங் களிறு குயமுரு - பல்பொறிய செங்கட்புலிமாவாமே ரேற்பதொன்றுண்டு - கற்றனை ஓம்பாது மற்றும் பரித்துலகறல்.

91. எந்தவினைமுற்றுகளில் எதிர் மறைவிகுதி மறைந்து வரும்?

92. படிக்க-கொடுக்க என்பவைகள் வினையெச்சமாகவும், வினைமுற்றாகவும் வரும்படி வாக்கியத்தில் அமைத்தெழுதுக.

93. நடவா - ஓடா என்பவைகள் பெயரெச்சமாகவும் வினைமுற்றாகவும் வரும்படி வாக்கியத்தில் அமைத்தெழுதுக.

## இடையியலும், உரியியலும். 4

94. இடைச்சொல்லாவதென்ன?

95 ஒகாரம் ஐயப்பொருளிலும், உம்மைமுற்றுப்பொருளிலும் வருவதற்கு உதாரணங் கூறுக.

96. வொல் என்னபொருளில் வரும்?

97. ஒரு குணத்தைக்காட்டும் உரிச்சொல்லுக்கும், பல குணத்தைக்காட்டும் உரிச்சொல்லுக்கும் உதாரணமெழுதுக.

98. இடைச்சொல்லடியாகப் பிறக்கும் பெயர்ப்பகுபதத்திற்கும், உரிச்சொல்லடியாகப்பிறக்கும் வினைப்பகுபதத்திற்கும் உதாரணமெழுதுக.

## பொதுவியல்.

99. ஆகுபெயராவதென்ன?

100. முதலாகுபெயர்-கருவியாகுபெயர்-பண்பாகுபெயர்களுக்கு வேறுபெயரும் உதாரணமும் எழுதுக.

101. அல்வழிப் புணர்ச்சியில் சேர்ந்த வேற்றுமைகளெவை?

102. உருபும்பயனுமுடன்றொக்க வேற்றுமைத்தொகைக்கு மூன்றுதாரணங்கூறுக.

103. அல்வழிப் புணர்ச்சியில் தொகைநிலைத்தொடர்களெவை? தொகாநிலைத்தொடர்களெவை?

104. இவைகளுக்குப் பொருட்புணர்ச்சி கூறுக.

சிறுவீடு-சிறியவீடு, பலமரம் - பலாமரம், நிறைஇருள்-நிறைந்த இருள், வந்தான் இராமன்-இராமன்வந்தான், வா இராமா-இராமாவா, வருபொருள்-வரும்பொருள்.

105. உயர்திணையும்மைத்தொகை எதனால் முடியும்? உதாரணமென்ன?

106. செய்யுளில் பெயர்வினைகளின் ஈற்று அயல் ஆகாரம் எவ்வாறு திரியும்?

107. திணை-பால்-இடம்-காலவழுமைதி என்றால் என்னை? உதாரணமுங்கூறுக.

108. மரபு என்பதென்ன? உதாரணங்கூறுக.

109. செயப்படுபொருளைக் கர்த்தாவைப்போல் வைத்து மூன்று வாக்கியமெழுதுக.

110. எந்தக் காரணங்களினால் சொற்கள் மருவிவரும்? உதாரணமென்ன?

111. எந்தப்பொருள்கள் விலைகொண்டு முடியும்போது பன்மை பெற்றுவரும்?

## புணரியலும் பதவியலும்.

112. விகாரப் புணர்ச்சி யெனப்படுவதென்னை?

113. விகாரப்புணர்ச்சி எத்தனை வகைப்படும்? உதாரணமென்ன?

114. யகர வுடம்படுமெய் வரும்படி மூன்றுதாரண மெழுதுக.

115. வகரவுடம்படுமெய் வரும்படி இரண்டுதாரண மெழுதுக.

116. குற்றியலுகரத்துக்கு முன்உயிர்வந்தால்எவ்வாறாகும்!

117. உயிரெழுத்துக்குமுன் முற்றியலுகரம் கெடாமல் வருதற் குதாரண மெழுதுக.

118. இவைகளை எவ்வாறு புணரும்? விதியென்ன?

ஆடு + மயிர். கயிறு + வலி.
ஆடு + தின்றான். காடு + ஆண்டான்.
பெரு + ஆசை. குறு + உயிர்.
பல + நாள். பொன் + வளையல்.

119. உயிரீற்றின்முன் வரும் வல்லினம் எவ்வாறாகும்? உதாரணமென்ன?

120. இந்த வல்லினம் மிகுந்ததற்கு விதியென்ன?

எந்தத்திசை. ஓடிப்போனான்
இந்தக்காடு வைதுப்போனான்.
நாய்க்குட்டி செம்புப்பானை
மதுரைப்பட்டணம்? கேளாக்கதை

132. விகாரம் எத்தனைவகைப்படும்? அவையாவை.

133. பெயரிடைநிலைக்கும் வினையிடைநிலைக்கும் பேதமென்ன?

## செய்யுள்.

1. நீதிமஞ்சரியில் இனியவைநாற்பது முதலியவைகளைச் செய்தவர்கள் பெயரென்ன? அவர்களில் மதுரைச்சங்கத்தைச் சேர்ந்தவர்கள் யார்?

இனியவை நாற்பதுமுதல் அரிச்சந்திர புராணம் வரையில்.

2. மானம்படவரின் என்னசெய்யவேண்டும்?

3. “முட்டில்பெரும் பொருளாக்கியக்கால் மற்றது தக்குழியீதலே நன்று” முட்டில்பெரும் பொருள்என்றால் என்ன? தக்குழியீதலாவது என்னை?

4. யாரிடத்துச் சென்றுணல் இன்னா?

5. பிரிந்துகூடிய சிநேகத்தின் பெருமை எதுபோல் நொய்தாகும்?

6. பெரியோர் தமது குறையைப்பாராட்டாமல் பிறர் குறையை நீக்குவர் என்பதற்குக் காட்டிய உவமானமென்ன?

7. “கடவுளவிர் சடைமுன் கண்டளவில் வீயுஞ்சுர நீர்மிகை” “என்றுங் கவரார்கடலின்கடு” என்பவைகளால் விளங்கும் பூர்வகதை என்னை?

8. “முனைக்கு மெயிறு முதிர்சுவை நாவிற்கு வினைக்கும் வலியனதாமென்று” இதன் உவமேயமென்ன?

9. மகடூஉ முன்னிலை, ஆடூஉ முன்னிலை என்றாலென்ன? உதாரணமெழுதுக.

10. வேந்தர்க்கற்றோர்க்குஒப்பாவாரென்பதற்குக்காட்டிய உவமை என்னை?

11. போதில் இளையாமை வைகுந்திருநாடா என்றது எந்த நாட்டரசனை? அவ்வரசன் பெயரென்ன?

12. போதில் இளையாமை வைகுந்திருநாடு என்பதன் கருத்தென்னை?

13. சூதாடுதலோடொத்த குற்றங்களெவை?

14. சூதாடுவதனால் விளையும் தீமைகளெவை?

15. சினக்கதிர் வேற் கண்மடவாய் என்றதுயாரை?

16. மனம் எதனால் தூய்மையாம்?

நீதிநெறி விளக்கம்.

17. கல்வி எவைகளைத்தரும்?

18. பிறரால்நன்குமதிப்படையப் பெறவிரும்புவோன் செய்யவேண்டுவதென்னை?

19. அறம்-பொருள்-இன்பம்-வீடு இந்நான்கிற்கும் வடமொழியில் வழங்கும் பெயரென்ன?

20. இறைமாட்சி யாருக்குப் பயன்தராது?

21. இறைமாட்சி மன்பதை யோம்பாதார்க்குப் பயதராதது எதுபோலும்?

22. நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம்போல்வார் யார்?

23. தாட்சணியத்தினால்செய்ய முடியாதகாரியத்தையும் செய்வோம் என்று சொல்லுதல் எதுபோலும்?

24. தீயோர் செல்வம் பெருகினாலும் பின் எவ்வாறும்? அது எதுபோலும்?

25. யாவரையும் வஞ்சித்தோமென்று ஏன்மகிழலாகாது?

26. கொடாதவர் இன்சொல்லும், கூழைமைக்கு நூலாசிரியர் என்னகாரணங் கற்பித்திருக்கின்றார்.

27. மறைவழிப்பட்ட பழிமொழி எதுபோலப் பரவும்

## அறநெறிச்சாரம்.

28. யார் நூறைக்கத் திறப்பதோர் தாளை இங்குப்பெற்றவ ராவார்?

29. யாருடைய இவ்வாழ்க்கை யிருளுக்கு ஒப்பாகும்?

30. நல்ல தர்மங்களைக் கேட்டாலும் கீழ்மக்களுடைய மனம் எத்தன்மையதாகும்? அதற்கு உவமையென்னை?

31. கல்லாவொருவனுக்குக் காரணங்காட்டினும் ஏ உணரான் என்பதற்கு உவமை என்ன?

32. காட்சிதிரியின் எது திரியும்? அதற்கு உவமை என்?

33. கெடுக்கப்படுவதும், கொடுக்கப்படுவதும், உண்ணப்படுவதும், எப்போதும் எண்ணப்படுவதும் எவை?

34. அறமாகிய சதியையுடைய பயிருக்கு நிலமும்-விதையும்-களையெடுத்தலும்-எருவும்-நீரும் எவை?

## பழமொழி.

35. உபகாரஞ் செய்தவர்களுக்கு அபகாரஞ் செய்தல் எதுபோலும்?

36. நாய்காணிற் கற்காணு வாறுபோல்வது எது?

37. கற்றறிவார்கண்டதெது? அதற்கு உவமை என்ன?

38. நல்லொழுக்க மில்லானுக்கு அதிகாரங்கொடுத்தல் எவ்வாறும்?

39. "நுணலுந் தன் வாயாற்கெடும்" என்பதற்குஉவமைய மென்ன?

## திரிகடுகமும் நான்மணிக்கடிகையும்.

40. திரிகடுகம் - நான்மணிக்கடிகை என்பவைகளுக்கு அர்த்தமென்ன? இவை இந்நூல்களுக்கு என்ன ஆகுபெயராய் வழங்குகின்றன?

41. நான்மறையும் சதுரங்கசேனைகளும் எவை?

